கழக வெளியீடு: 226.

வெள்ளகால்
சுப்பிரமணிய முதலியார்

# தனிக்கவித் திரட்டு

(குறிப்புரையுடன்)

---

உரிமையாளர்:
மகா மகோபாத்தியாய டாக்டர்
உ. வே. சாமிநாதையர்




முகவுரை ஆசிரியர்:
அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்
பண்டிதமணி
மு. கதிரேசச் செட்டியார்

பதிப்பாசிரியர்:
வித்வான் கு. அருணாசலக் கவுண்டர்
தமிழ்த் தலைமை ஆசிரியர்
மதுரைத் திரவியம் தாயுமானவர் ஹிந்து கலாசாலை
திருநெல்வேலி

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிட்டெட்
திருநெல்வேலி  சென்னை

விலை. ராப்பர் ரூ. ~~0—12—0~~ காலிகோ ரூ. 1—[illegible]—0

கிடைக்குமிடம் :—

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்

கீழ ரதவீதி, திருநெல்வேலி

கிளை நிலையம் :

6, பவளக்காரத் தெரு, சென்னை

*திருநெல்வேலி, ஹிலால் பிரஸில்*

*பதிப்பிக்கப்பெற்றது*

1939



மகா மகோபாத்தியாய

திராவிட வித்தியா பூஷணம் தாக்ஷிணாத்திய கலாநிதி

**டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்**

# உரிமையுரை

இனிய இலக்கிய நாயகங்களாகவும் சிறந்த பழஞ் சரித்திர ஆராய்ச்சிச் சாதனங்களாகவும் நன்கு பயன்பட்டு வருகின்றனவும் இறந் தொழிவனவாய் இரங்கத்தக்க நிலையி லிருந்தனவுமான அருமந்த பல சங்க நூல்களையும் பிற்காலத்திய எண்ணிறந்த நூல் களையும் பொருட்செலவு காலச்செலவுகளைப் பொருட்படுத்தாது சிரமஞ் சிறிதும் பாராட்டாது பெரிதுழைத்துச் செவ்விய முறை யிற் செப்பஞ் செய்து அரிய பெரிய உயரிய ஆராய்ச்சிக்குறிப்புக் களுடன், பதிப்பாசிரியர்கள் பலரும் வியந்து நயந்து பின்பற்றத் தக்க முன் மாதிரியாக, அச்சேற்றி, அந் நூல்கள் என்றும் இறவாது நின்று நிலவும்படி செய்து, இக் காலத்தில் பணக் குவையும் பண்டிதக்குழுவும் படைத்த பல சங்கங்கள் சேர்ந்து செய்தற்கரிய சிறந்த தமிழ்ப் பெருந் தொண்டுசெய்து முடித்திருப்பதையும், சென்ற அரை நூற்றாண்டாகப் பழகிய சிறியேன் சிறு நூல்களையும் சிரத்தையோடு பார்வையிட்டுச் சிறந்த திருத்தங்கள் செய்து உதவியிருப்பதோடு பல தருணங்களில் வாசிகமாகவும் காயிகமாகவும் பலபல அன்புச்செயல்கள் செய்திருப்பதையும் மனமார்ந்த நன்றி யுணர்வுடன் நினைவுகூர்ந்து எனது இந்தத் தனிக்கவித்திரட்டைப் பிரமஸ்ரீ மகா மகோபாத்தியாய திராவிட வித்தியா பூஷணம் தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுக்கு வணக்கத்துடன் உரிமையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

வே. ப. சுப்பிரமணியன்.

# திருத்தக் குறிப்பு

| பக்க எண் | பாட்டெண் | பக்க வரி எண் | இருக்கிறபடி | திருத்தியபடி |
|---|---|---|---|---|
| 8 | 20 | 16 | பாவமு மின்று | பாவமுமின் று |
| 9 | 29 | 22 | வாந்தி | வந்தி |
| 13 | | 31 | சவம் | சலம் |
| 18 | 46 | 26 | இருந்து | கிடந்து |
| 20 | 56 | 18 | அருத்தியாற் பழங்கள் | அருத்தியால் விதைக |
| | | | நடுங்கிழ வாரீ | ளூன்றிடுங் கிழவா |
| 22 | 66 | 16 | மூவரே, பார் என்று | மூவரே, பார்'என மொழிந்து |
| | | 17 | நிலத்தெழு திக்காட்டி | நிலத்தினில் எழுதியே காட்டி |
| 23 | 69 | 4 | விரூப ரெனினும் | விரூப ரென்னினும் |
| | 70 | 8 | தம்மது | தம்முடை |
| | 71 | 16 | வாருண்டோ | வாருமுண்டோ |
| 24 | 77 | 13 | கேள்டீ | கேளடீ |
| | 79 | கடைசி வரி | லாரரே | லாரே |
| 25 | 83 | 20 | சிசுப்பலி | சிசுபலி |
| 26 | 89 | 21 | பெண்களுக்குவமை | பெண்கள் உவமையாதல் |
| 30 | | 19 | டினர்கள் | டினர்காண் |
| 47 | 153 | 11 | றோற்றூறு | றேற்றூறு |
| 48 | 156 | 19 | கெடாமா | கெடமா |
| 49 | 159 | 27 | கண் கணீர் | கண் ணீர் |
| 58 | 192 | 24 | ரூ ராவன்று | ரூ ரராவன்று |
| 60 | 198 | 10 | மத்தோடறி | மத்தொடறி |
| 60 | 199 | 17 | நேயராய் | நேயரா |
| | 200 | 20 | ரின்றியவாண் | ரில்லாத |
| | | | மையினுக்கு | வாண்மைக்கு |
| 62 | | 1 | முத்து | டிை முத்து |
| 69 | 228 | 1 | சீலேடை | சிலேடை |
| 73 | 246 | 2 | ணிணையென் | ளிணையென் |
| 78 | 261 | 4 | தேருகட்கயிலை | தெருக்கட் கயிலை |
| 84 | | 1 | எட்டையாபுரம் | எட்டயபுரம் |
| 84 | 280 | 22 | நூவல் | நுவல் |
| 95 | 331 | | சிந்தை செய் தால்இது | சிந்தை செய்தால்இஃ(து) |




## பொருளடக்கம்

# பதிப்புரை

'பெருகும் ஒன்பான் சுவைவனமும்
பெருங்கற் பனைகள் பலஅணிகள்
மருவு வனமும் திரிபுவனம்
மகிழும் திரிபு வனமும்உற
"அருமை! அருமை!!" எனக் கவிஞர்
அதிச யிக்க'*த்

தக்கனவாக அமைந்த பாடல்கள் உள்ள இந்தத் தனிக்கவித் திரட்டில் 343 கவிகள் அடங்கியிருக்கின்றன. அவற்றுள் 113 கவிகள் திரிபு யமகம் சிலேடை முதலிய சொல்லணி வகையைச் சேர்ந்தவை.

இந் நூலாசிரியர் ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கு, 1—8—37-ல் தமிழன்பர்களெடுத்த எண்பதா மாண்டு வெள்ளணி விழாவில், திருநெல்வேலித் தமிழ் இலக்கிய சங்கத்தார் தங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளும்போது, 'சென்ற அறுபதாண்டுகளாக நெடுகிலும் இடைவிடாது தாங்கள் செய்துவந்த முயற்சியும் போராட்டமும் இல்லாமற் போயிருந்தால், தமிழருக்கும் கம்பருக்கும் தற்காலம் ஏற்பட்டுள்ள நன் மதிப்பு ஏற்பட்டிராது என்பது திண்ணம்' என்றும், 'இது அலங்கார வார்த்தையல்ல; எங்கள்.........துணிபு' என்றும் தங்கள் உள்ளக் கிடக்கையை வெளியிட்டார்கள். தாய் மொழியைப் போற்ற இந் நெடுங்காலத் திடையில் முதலியாரவர்கள் செய்துமுடித்த முயற்சி எத்தன்மையது என்று அறிய விரும்புவார்க்கு, அதன் பயனாக எழுந்த இத் தனிப்பாடல்கள் சிறந்த சாதனமாக இருப்பதுடன் அவர்களது 'அதுல கவித்துவ சக்தி'†க்குச் சான்றாகவுமிருக் கின்றன.

தமிழருட் பலரும் தாய் மொழியை வெறுத்துப் புறக் கணித்து வேற்று மொழியை விரும்பிக் கற்கப் புகுந்தகாலத்து, முதலியாரவர்கள் ஆங்கில கலாசாலையிற் சேர்தற்கு முன்னரே தமிழ் மொழியில் தேர்ந்த புலமை வாய்ந்தவர்களாய்த் தம்போன்ற மாணவரும் மற்றவரும் தமிழின் அருமை பெருமை இனிமைகளை அறிந்து மதிக்கும்படி செய்து வந்தார்கள்; கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்த்தார்கள்; சிரமமின்றிச் செய்யுளியற்றும்

* இந்நூல் 299-ம் பாட்டு.

† பண்டிதமணி கதிரேசச் செட்டியாரவர்கள் அகலிகை வெண்பாவுக்கு எழுதிய மதிப்புரை.

வன்மை கைவரப்பெற்று எவ்வகைப் பாவையும் செவ்வையாகப் பாடினார்கள். தாய் மொழியைப் புறக்கணித்தவர்க்கு ஆங்கிலக் கல்வி தீங்கிழைத்தல் போலன்றி, இவர்கள் திறத்தில் எவ் வெவ் வகையில் எவ்வெவ்வாறு நன்மை செய்திருக்கிற தென்பதை இத் தனிக்கவித் திரட்டுத் தெரிவிக்கின்றது.

'பதினாறு வயதுப் பிராயமாயிருக்கும்போதே தமிழிலுள்ள சிலேடை யமகம் திரிபு என்ற தமிழ்க் கற்பாறைகளை உடைக்க (இவர்கள்) ஆரம்பித்துவிட்டார்கள். இந்த வர்க்கத்துச் சித்திரக் கவிகள் எவ்வளவு வைரம் பாய்ந்திருந்தாலும் முதலியாரவர்கள் கைக்கு வந்தால் தாமாகப் பிதிர்ந்து போய்விடும். தமிழ்ப் பாஷை இடங் கொடுக்கக்கூடிய சிலேடை வின்னியாசங்களை யெல்லாம் ஒருவாறு அளந்துவிட்டார்கள். அதனால் நெல்லைச் சிலேடை வெண்பாவை எளிதில் செய்துவிட முடிந்தது. அது அந்தக் காலத்துப் புலவர்களுக்கும் கவிராயர்களுக்கும் பெரு வியப்பாகவே இருந்தது' என்று T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள் நமதாசிரியரைப்பற்றிக் 'கலைமகள்'ளில் எழுதியதற் கேற்ப, இத் தனிக்கவித் திரட்டு சொன்னயம், பொருள் நயம், தொனி நயம் முதலிய பன்னய மிகுந்த தீஞ்சுவைக் கவிகளால் — 'இன்னமுதப் பண்பெலாங் காட்டு தமிழ்ப்'* பனுவல்களால் — சமைந்தது.

இந்நூலில், நயம் ஒன்றோ பலவோ இல்லாத வெறும் பாட்டு மருந்துக்கும் கிடையாதென்பது இதனை முழுதும் படிப்பார்க்குத் தெரிய வரும். தொன்று தொட்டு வந்த மரபுகளைத் தழுவி ஆன்றோராட்சியை அடியொற்றிச் சமயக் கதைகளையும் அகப்பொருள் துறைகளையும் திரிபிலமைத்துப் பாடுதல் பெரு வழக்கு இத்தகைய திரிபுகளில் மிகப் பெரும்பான்மையாகப் பொருள் வழித் திரிபு செல்லாது திரிபு வழிப் பொருள் செல்லக் காண்கின்றோம். நிகழ்ந்த செய்திகளைத் தெரிவிக்கும் முதலியாரவர்களுடைய நிருப கவிகளில் மேற்கூறியதற்கு விலக்காகப் பொருளுடன் திரிபு இசைந்துபோகக் காணலாம். குமாரசுவாமி, சுப்பிரமணியன், முத்துசாமி, அருணாசலம், இருதயாலய மருதப்பன் போன்ற திரிபுக்கு இசையாத இயற் பெயர்களை ஆசிரியர் பல இடங்களில் பலபடி மிக எளிதாகவும் இனிய பொருளுக்கிடமாகவும் திரித்துக் காட்டியிருக்கும் விதம் கற்றோர்க்கு வியப்பும் நயப்பும் விளைத்தல் ஒருதலை. பொருளுணர்ச்சியுடன் இந்நூலில் உள்ள கவிகளைப் படிக்கும் போதும் கேட்கும்போதும், அவை,

* இப்பதிப்புரையின் இறுதியிலுள்ள வெண்பாவைப் பார்க்க.

'சென்று செவியளக்கும் தன்மையவாய்ச் சிந்தையுளே
நின் (று,) அளவி லின்பம் நிறைக்கும்'

இயல்பின வென்பது தெரியலாம்.

இத்தகைய சொல்லலங்காரப் பண்புடன் குமரகுருபரரது பெருமித நடையும் சிவஞான முனிவரது பொருள் தெளிவும் இந் நூலரங்கில் களி நடம் புரிகின்றன. 'சிறிய உருவத்தில் பெரிய தெள்ளிய ஒளியை அடக்கித் திகழும் விலைமதிக்கொண்ணு அரும் பெரும் இரத்தினங்களாக' * இத்தனிப் பாடல்களிற் பல முத் தொள்ளாயிரம் முதலிய பழங் கவிகளின் சாயலையும் சாதுரியத்தை யும் கொண்டு விளங்குகின்றன. அவற்றுள் ஒன்றை, அதனை யொத்த ஒரு கவியுடன் கீழே தருகின்றேன் :-

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கண்ணின் றுருகக் கலந்துரைத்துப் — பின்னின்
றழித்துரைக்கு மாந்தரை யஞ்சியே தேவர்
விழித்திமையா நின்ற நிலை —என்பது அறநெறிச் சாரம்.

எட்டிற் குடுமியினை எட்டா விடற்காலைக்
கிட்டிப் பிடிக்கின்ற கீழான — துட்டர்க்குத்
தப்புதற்கே யன்றோ தலைகால்கள் விண்பிலங்கட்
கப்புறத்தான் ஆனன் அரன் — இத்திரட்டு 80-ஆம் பாட்டு.

முதலியாரவர்கள் மூன்று தலைமுறைக் காலமாக(த் தமது பால குமார விருத்தப் பருவங்கள் மூன்றிலுமாக)ப் பாடிய இத் தனிப் பாடல்களை நான் அவர்களுடைய கம்ப ராமாயண சாரப் பெரு நூலையும் அகலிகை வெண்பா 'அருந்தமிழ் அமிழ்த'த்தையும் பதிப்பிக்க நேர்ந்தபோது, பலமுறை நேரில் கேட்டு அறிந்து அனுபவித்திருக்கிறேன். அதனால் இப்பாடல்களைத் திரட்டிக் குறிப்புரை எழுதித் தமிழ் உலகம் பயன் எய்தக் கருதிப் பதிப் பிக்கலானேன். அவர்களை,

எண்பதாண் டான இளைஞனே இன்னமுதப்
பண்பெலாங் காட்டுதமிழ்ப் பாவலனே — நண்பனே
வெள்ளகால் செல்வனே வேள்சுப் பிரமணிய
வள்ளலே வாழ்க மகிழ்ந்து

என்று, இனிய கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் வாக்கி னால் வாழ்த்துகின்றேன்.

ம. தி. தா. இந்து காலேஜ்
திருநெல்வேலி
6—4—'39

கு. அருணசலக் கவுண்டர்.

* பண்டிதமணி கதிரேசச் செட்டியாரவர்கள், முதலியாரவர்கள் பாடிய அகலிகை வெண்பாவைப்பற்றி எழுதியது.

# முன்னுரை

---

இந்தத் தனிக் கவித் திரட்டிலுள்ள பாட்டுக்களில் பெரும் பான்மையானவை, அரை நூற்றுண்டுக்கு முன் இயற்றப்பட்டவை. முதல் முதல் இவைகளை முறையாகப் பார்வையிட்டவர், திருநெல்வேலி இந்து கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதரா யிருந்து காலஞ்சென்ற மேலகரம், சுப்பிரமணியக் கவிராயரவர்கள்; முடிவாகப் பார்வையிட்டுத் தொகுத்துத் துறைப்படுத்துச் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தலென்னும் இரண்டழகும் ஒருங்கமையக் குறிப்புரை யெழுதிப் பதிப்பித்து வெளிப்படுத்தியவர்கள், மேற் கூறிய கவிராயரவர்களை அடுத்து அவர்களது ஆசிரிய உத்தி யோகத்தில் அமர்ந்துள்ள வித்துவான் கு. அருணசலக் கவுண்டரவர்கள்.

இவர்கள் இத்திரட்டைப் பதிப்பிக்கும்போது, 'சருவ சன செபம்' முன்னமே புத்தகமாகப் பதிப்பிக்கப் பட்டிருந்தாலும், அது தனிக் கவித் தன்மையதாதலால், இத்திரட்டில் சேர்த்தற் குரியதென்று சேர்த்துக்கொண்டதன்றி, இத்திரட்டில் காணப்படும் குரு வணக்கக் கவிகள் அவைகளுடன் காப்புக் கவி முதலாகச் சில கவிகள் சேர்த்து ஒரு சிறு பிரபந்தமாக வெளியிடத் தக்கதென்று கூறினர்கள். அவர்கள் கூறியவாறு செய்து 'திருவாவடுதுறை அம்பலவாண தேசிகமாலை' என்ற பெயருடன் ஒரு சிறு நூல் வெளியிடப்பட்டுள்ளது.

இத்திரட்டுக் கவிகள் சிலவற்றை அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில், தமிழ்ப் பேராசிரியர் ( Professor of Tamil ) சோமசுந்தர பாரதி, M. A., B. L. அவர்கள் முதலிய தமிழாசிரி யர்கள் முன்னும், எல்லாவற்றையும் மதுரைத் தமிழ்ச் சங்கத்துக் காரியாலயத்தில் அந்தச் சங்கக் கலாசாலைத் தலைமை ஆசிரியரும் 'செந்தமிழ்'ப் பத்திராதிபருமான திருநாராயணையங்காரவர்கள் முதலிய சங்க வித்துவான்கள் முன்னும் படித்துக் காட்டினேன். எல்லாரும் அன்புகூர்ந்து கேட்டு அவரவர்களுக்குப் புலப்பட்ட சில பல திருத்தங்களைக் குறிப்பித்துதவினர்கள். இப் புலவர் பெருமக்களனைவர்க்கும் என் உளமார்ந்த நன்றி உரியதாயுள்ளது.

இத்திரட்டு அச்சிடுதற்குச் சித்தமான சுத்தப் பிரதியைச் செந்தமிழ் உதவிப் பத்திராதிபர் T. K. இராமானுஜையங்காரவர்கள் மிகக் கவனமாகப் பார்வையிட்டுப் பல சிறந்த திருத்தங்கள் குறித்தனுப்பிப் பேருதவி புரிந்தார்கள். இவர்களுக்கு நான் மிகக் கடப்பாடுடையேன்.

இந்தத் தனிக்கவித் திரட்டை அன்புடன் உரிமையாக இனிதேற்றுக்கொண்ட மகாமகோபாத்தியாய வித்தியாபூஷணம் தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுக்கும் தமது பல வேலைகளினிடையே இதற்கு ஆதரவாக ஆன்ற மதிப்புக்குரிய முகவுரை யெழுதி உபகரித்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துறைத் தலைவரும் (Head of the Tamil Department) தமிழ்ப் பேராசிரியரும் (Professor of Tamil) ஆன பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களுக்கும் எனது அத்தியந்த வந்தனங்க ளுரியன.

முதுமைக்கில்யபான தளர்ச்சியுடைய எனக்கு, 'இழுக்கலுடையுழி ஊற்றுக்கோல்' போன்ற எந்த நண்பரது ஊக்கமிக்க உதவி யில்லாதிருந்தால், கம்ப ராமாயணசாரம் இரண்டு முதலாந்து முடியவுள்ள நான்கு காண்டங்களும் அகலிகை வெண்பா மூன்றும் பதிப்பும் இத்திரட்டும் வெளிப்பட்டிராவோ, அந்த நண்பரான வித்துவான் கு. அருணாசலக் கவுண்டரவர்களுக்கு நான் பட்டுள்ள கடன் உணரக்கூடியதேயன்றி உரைக்கக்கூடியதன்று.

இதனைத் தங்கள் வெளியீடுகளுள் ஒன்றாக வெளியிட்ட திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கும், செப்பமுறப் பதிப்பித்த திருநெல்வேலி, ஹிலால் பிரஸ் அதிபரவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

வெள்ளகால் P. O.<br>
தென்காசித் தாலுகா.<br>
24—9—1939.

வே. ப. சுப்பிரமணிய முதலியார்.



அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்

( Professor of Tamil )

பண்டிதமணி

மு. கதிரேசச் செட்டியாரவர்கள்




அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர்
(PROFESSOR OF TAMIL)
பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்
எழுதிய

# முகவுரை

---

வெள்ளகால், ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் G. B. V. C. அவர்கள் பற்பல சமயங்களிற் பாடிய தனிப்பாடல்களைத் தொகுத்து, "சுப்பிரமணிய முதலியார் தனிக்கவித் திரட்டு" என்னும் பெயரால் வெளியிடப்பட்ட தொகை நூலைப் படித்துப் பார்த்தேன். இத் தொகை நூலிற் பெரும்பாலும் உள்ள கவிகள் திரு. முதலியாரவர்கள் தம் நண்பர்களுக்கு உய்த்த நிருபங்களில் எழுதப்பட்டனவும் புதிய முறையிற் பற்பல அரிய கருத்துக்கள் புலப்படப் பாடப்பட்டனவுமாம். இத் திரட்டுநூற் பாடல்களில் யமகம் திரிபு மடக்குச் சிலேடை முதலிய சொல்லணிகள் காணப் படுகின்றன. இச் சொல்லணிகளோடு சுவை பயக்கும் பொருளணி நயங்களையும் ஆங்காங்குக் காணலாம். இக் காலத்திற் சிலர் யமகம் திரிபு மடக்குச்சிலேடை முதலிய சொல்லணிகள் பொருணயத்தைக் கெடுக்கும் ஆதலால் இத்தகைய செய்யுட்கள் மக்களுக்குப் பயன் விளைக்காவெனக் கூறுவர். அங்ஙனங் கூறுதற்குரிய ஏதுக்கள் பலவற்றுள், பொருளறிதற்குத் தக்க கல்வியாற்றல் அவர்க்கு இன்மையும் ஒன்றாம். சிறந்துயர்ந்த பொருணலத்தையே குறிக்கோளாகக் கொண்டு வெளிப்படுக்கும் பெரும் புலவர்கள் இன்னோரன்ன சொல்லணிகளில் முக்கிய நோக்கமின்றிச் செல்லுதலும், அன்னார் கவித்துவத்திற்கு இவை யீடாகா வென்பதும் உண்மையே. அவ்வுயர் புலமை நோக்கி யேற்றத் தாழ்வு கூறும் புலவர் பெருமக்கள் பொருளுரை அமைவுடைத்தாம். அந்நெறி பற்றி நுண் மாணுழை புலமிக்க பெரும்புலவர் செய்யுட்களை ஆராய்தற்குரிய மதுகையும் இன்னோரன்ன சொல்லணிமிக்க பாடற் பொருளைக் காண்டற்குரிய கருவியும் இல்லார் சிலர் இவற்றிற்குக் குறைகூறப் புகுதல் எள்ளி நகையாடற்குரியதாகும். ஒரு மொழியிலுள்ள பல திறப்பட்ட இலக்கணங்களுக்கும் இலக்கியம்

இருத்தல் அம்மொழி வளங்குன்றுமைக்கு ஏதுவாகும். மேலும், பலவகையான சொற்களேயும் சொற்றொடர்களேயும் அறிந்து கோடல், அருந்தொடர்களேப் பொருட்கியையப் பிரித்துப் பொருள் கோடல் முதலிய நூற் பயிற்சிகளில் மாணவர் தலைப்பட்டுக் கல்வி நலமுடைய ராதற்கு இன்னேரன்ன சொல்லணி மிக்க செய்யுட் களும் ஏற்றனவேயாம்.

கவித்துவம் என்பது எல்லோர்க்கும் எளிதாக அமைவதன்று. சிறந்த கல்வியாளர்பாற் கவித்துவம் அமையாமலிருத்தலேயும் கல்வி நலம் சிறிதுடையார் மாட்டு அஃது அமைந்திருத்தலேயும் நம் அனுபவத்திற் காண்கின்றேம். சிறந்த கல்வியும் கவி பாடும் வன்மையும் ஒருங்கு அமையப் பெற்றுர் மிகச்சிலரேயாவர். அச் சிலருள் திரு. முதலியாரவர்களும் ஒருவராவர். மேனுட்டுக் கலைச் செல்வம் நிரம்பப்பெற்று நம் தாய்மொழியிற் சிறந்த பயிற்சியும் கவித்துவ ஆற்றலும் ஒருங்கமையப்பெற்ற திருவுடையாரைக் காண்டல் மிகவும் அருமை. இவ் அரும்பொருளாக இக் காலத்து விளங்குபவர்கள் திரு. முதலியாரவர்களே யாவர். பொருட் சுவை மிக்குப் பயில்வார் உள்ளத்தை இன்பக் கடலிற்றிளைக்கச் செய்யும் இவர்கள் கவித்துவ இயல்பிற்கு இவர்கள் முன் இயற்றி வெளியிட்ட அகலிகை வெண்பா ஒன்றே போதிய சான்றுகும். தமிழிலுள்ள சில பிரபந்த முதல் பெரிய நூல்கள்வரையுள்ள எல்லா நூல்களிலும் இவர்களுக்குப் பயிற்சி யுண்மையை இத்தொகை நூல் புலப் படுத்துவதாகும்.

மிகக் கடினமான யமகந்திரிபுகளும், இவர்களுக்கு எளியன வாக அமைதலே ஆங்காங்கு அறியலாம். குன்னூர்க் குமாரசுவாமி முதலியார்க்கு எழுதிய நிருபப்பாடலில் " குமாரசுவாமித்திர " (பாடல் 160) என்னுந்துணையும் யமக மாக்கப்பட்டுள்ளது. முத லடியில் மித்திரயம் என்பது மும்மி எனவும், அதனில் எழுமுன் றில் ஒரு கூறு இம்மி எனவும் புலப்படுக்கப் பட்டுள்ளன. இம்மி மிகச் சிறிதளவு என்னும் பொருட்டாய்ப் பொய் கூறுமையை வலி யுறுத்தி நிற்பதாகும். இச் செய்யுள் எத்துணை ஆற்றலுக்கு நிலைக் களமாகவுள்ள தென்பது கருதத்தக்கது. ஒரு புலவன் தன் கருத் தின் வழிச் செய்யுளே யாத்தல் ஒன்று. செய்யுளின் வழிக் கருத்தைப் போக்கல் ஒன்று. பின்னது யமகம் திரிபு முதலிய சொல்லணிகள் தோன்றப் பாடும் பாடல்களிற் காணப்படுவதாம்.

இங்ஙனம் சொற்களின் இயைபு நோக்கத்தால் பாடும் புலவன் கருத்து வளம் பெறாது ஆற்றல் குன்றி நெகிழும் இயல்பினதாகும். இந்நிலையிலும் பொருணயத்தைப் புலப்படுத்த முயலும் இவர்கள் கவி நலம் பாராட்டத்தக்கதே. "திருக்குற்றா லத்திருக்குந் தீர்த்தன் பர்க் காகத், திருக்குற்றா லத்திருக்குந் தீர்த்தன்" (பாடல் 4) இன்னோரன்ன செய்யுட்கள் பொருளை எளிதிற் புலப்படுத்திக் கவித்துவத்திற்கும் சான்றாவனவாம். ஐவகை நிலப் பண்பும் நில மயக்கமும் பல் வகைச் சுவைகளும் ஒருங்கு புலப்படுத்து விளங்கும் "என்று மென்றோழி" என்னும் 6-ம் பாடலின் செம்பொருள் குறிப்புப் பொருள்களைக் குறிப்புரை யாளர் சுருக்கமாகப் புலப்படுத்தியுள்ளார். அச் செய்யுள் ஒன்றே இத் தொகை நூலுக்குத் தலைமணியாகத் திகழ்வதாகும். குரு வணக்கச் செய்யுட்களில் 9, 13, 14, 17, 19, 26 இவ் வெண்ணுள்ள வெண்பாக்கள் மிக்க பொருட் சிறப்புடையனவாய்ச் சைவ உண்மைகளைப் புலப்படுத்து இன்புறுத்துவனவாம். இவற்றில் 14-ஆம் வெண்பாவில் "கையதனின் மிக்கதுகால்" என்று மேற் கொண்டு அதனைச் சாதித்தற்கு, கை அழிதன் மாலையதாகிய வையகத்துச் செல்வமே யீந்திடும் எனவும், கால் அழிவில்லாத முத்திச் செல்வத்தை அளிக்கும் எனவும் குறித்த காரணம் மிகப் பாராட்டத்தக்கது. 17, 19-ஆம் வெண்பாக்கள் சித்தாந்த வுண்மை களைச் செவ்வனம் விளக்கித் திகழ்வனவாம். சருவசன செபம் என்னுந் தலைப்புடைய பாடல் நன்னெறி யொழுக்கத்தைப் போதிப்ப தாகும். "அருத்தியாற் பழங்கள் நடுங்கிழவா" என்னும் 56-ஆம் செய்யுளில் பின்னோர் பலனடைய முன்னோர் உழைத்தலைப்பற்றி வினாவிடையில் வைத்து விளக்கியிருக்குஞ் செய்தி படித்தின்புறற் குரியது. மக்களுக்கு வாய் ஒன்றாகவும் கை காதுகள் இவ்விரண் டாகவும் இருப்பதன் காரணங்கூறு முகமாகப் பாடிய 74-ஆம் செய்யுள் முதலியன புதிய கருத்துக்களை யுடையனவாய் மிகவும் சுவை பயப்பன.

ஆங்கிலப் புலவர்கள் கூறிய அரிய கருத்துக்களை மொழி பெயர்ப்பெனத் தோன்றாவாறு செந்தமிழ்த் தீங் கவிகளாகவே தமிழன்பர் துய்த்து மகிழும் வண்ணம் இவர்கள் மொழி பெயர்த் துப் பாடியிருக்கும் "விறகு விற்போயே" என்பது முதலிய பாடல்கள் தமிழறிஞர்க்கு விருந்தாக வுள்ளன. சிற்சில தமிழ்

ஆங்கிலப் பழமொழிக் கருத்துக்களை அமைத்துப் பாடியிருக்கும் செய்யுட்கள் மிகவும் நகைச் சுவையை விளைவிப்பனவாம். 66, 70, 80, ஆம் பாடல்கள் இதற்கு எடுத்துக் காட்டாக வுள்ளன. ஊற்று மலை ஜமீன்தாரைப்பற்றி "கைக்கிளை யாலலர் மேன்" என்னும் 116-ம் பாடலில் அகப்புறத்துறைப் பொருளும் யமகமடக் கணி களும் ஒருங்கே யமைந்து உவகையுறுத்துவனவாம். 122-ஆம் பாடலில் இராக் காலம் நிலாக் காலம் இராத்திரி என்னுந் தொடர் மொழிகளைக்கொண்டு மன்மதன் இயல்புரைத்திருப்பது அதி விசித்திரமாக வுள்ளது. சில நண்பர் உறவினரின் மரணங் குறித்துப் பாடிய கையறு நிலைச் செய்யுட்கள் அவலச் சுவையை வெளிப்படுத்திப் படிப்பவர் மனத்தைக் குழைக்கவல்லன. சிறப்புப் பாயிரங்களாகப் பல புலவர்களுக்கு அளிக்கப்பட்ட செய்யுட்கள் அவரவர் இயல்புகளையும் அவ்வந்நூற் பெருமையையும் புலப் படுத்தி விளங்குவன. குமண சரித்திரத்திற்குக் கொடுக்கப்பட்ட பாடலில் குமண வள்ளலைத் தலைக் கொடையாளியென்று உலகங் கூறுமாறு தலையையே அளித்தவன் எனக் கூறிய செய்தி பொருத்த மாக இன்புறுத்துவது.

தீய சொல்லினுந் தீய சிந்தையே தீயது என்னும் உண்மை யைப் புலப்படுத்து முகமாக 61-ஆம் செய்யுளில் கை நா கண் மனம் என்னும் இவற்றால் விளையுந் தீங்குகளின் இயல்பு குறிக்கப் பட்டுள்ளது. ஈண்டு மனமொழி மெய்களால் விளையுந் தீங்குகளே இங்ஙனங் கூறப்பட்டன. இம் மூக் கரணங்களானும் விளையும் பெருந் தீங்குகள் முறையே அழுக்காறு பொய் கொலை யென்பன வாம். இவற்றுள் முன்னதை நோக்கப் பின்னது ஏற்றமுடைய தென்பது யாவருமுணர்வர். "ஒன்றாக நல்லது கொல்லாமை மற் றதன், பின் சாரப்பொய்யாமை நன்று" என்னுந் திருக்குறளும் இதனை வலியுறுத்தும். இங்ஙனமாகவும் திரு. முதலியாரவர்கள் உடலால் விளையுந் தீங்கினும் நாவால் விளைவது மிக்கதெனவும் நாவால் விளைவதினும் மனத்தால் விளைவது மிக்கதெனவும் கூறப் புக்கு அக் கொலை பொய் அழுக்காறு என்பவற்றுள் முன்னைய இரண்டனையும் விலக்கி அடித்திடல் அதட்டிடல் இரண்டினையும் கை நா என்பவற்றின் செயல்களாகவும் அழுக்காற்றை மனத்தின் சிந்தனையாகவும் கொண்டு தாம் வெளிப்படுத்த நினைந்த பொருளுக் கியைய முறைப்படுத்துக் கூறியிருப்பது பாராட்டத்தக்கது.

இங்ஙனம் பொருளாராய்ச்சியில் உள்ள மூன்றித் துணிந்து ஒன்றை வெளிப்படுத்துவதே நுண் மாணுழை புலத்திற்கு ஒத்ததாகும்.

"சிலரிசைச் சந்தத் தினிற்சிலர் திரிபிற் சிற்சிலர் சிலேடை கற் பனையில், வலரெனப் படுவ ரவ்வண மின்றி வழங்குமெப் பாவி னும் வல்ல புலவன்" (பாடல் 228) என்று அழகிய சொக்கநாத பிள்ளையவர்களைத் திரு. முதலியாரவர்கள் பாடியுள்ளார்கள். அவ ரியல்பை யாமறியேம். இவர்களுக்கு இவ்வியல்பனைத்தும் உள்ள வென்பதைக் கண்கூடாக அறிந்து மகிழ்கின்றேம்.

இத் தொகை நூற்குத் திருநெல்வேலி M. D. T. இந்து கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் P. K. அருணாசலக் கவுண்டரவர்கள் கடின சந்திகளைப் பிரித்தும், அருஞ் சொற்களுக் குப் பொருள் விளக்கியும் எழுதிய குறிப்புரை, பாடற் பொருளறி தற்குப் பெரிதும் உபகாரமாகவுள்ளது. யமகந் திரிபுகளைப் படிப்ப தற்கு ஊக்கமின்றித் தளர்வோர்க்கு அக் குறிப்புரை ஊக்கமளிப்ப தாகும். இன்றியமையாது வேண்டற் பாலனவாகிய குறிப்புக் களுடன் பாடல்களைத் தொகுத்துத் தமிழுலகுக்கு உபகாரமாம்படி வெளியிட்ட திரு. கவுண்டரவர்கள் நன்றி பாராட்டற் பாலதே.

இத் தனிக்கவித் திரட்டு நூலை மஹாமஹோபாத்யாய தாக்ஷி ணாத்ய கலாநிதி டாக்டர், உ. வே. சாமிநாதையரவர்களுக்கு இந் நூலாசிரியர் உரிமையாக்கியது மிகவும் பொருத்தமானதே. தமி ழன்னையின் தவப்புதல்வராய்த் தோன்றி அவ்வன்னையின் அடிமுதல் முடிகாறும் எழில்பெற அணிந்துகொள்ளுதற்குரிய பேரணி கலன் களாக விளங்கும் தமிழ்ப் பெருங் காப்பியங்கள் பிற சங்கத்துச் சான்றோர் நூல்கள் முதலிய நூற்றுக்கணக்கான தமிழ் நூல்களைச் செவ்விய முறையின் ஆராய்ந்து அகத் தழகும் புறத் தழகும் ஒருங்கியைய அச்சிட்டு உதவி வரும் புலவர் பெருமானுக்கு அவர் கள் பேருபகாரத்தை நினைவுகூர்தற்கு அறிகுறியாக ஆண்டினாலும் அறிவினாலும் தமிழ்ப் புலமையாலும் ஒத்துத்திகழும் திரு. முதலியாரவர்கள் இந் நூலை யுரிமையாக்கியது பாராட்டத் தக்கதே. ஒரு புலவர் மற்றொரு புலவர்க்குக் கையுறையாகக் கொடுப்பதற்கு இதனினுஞ் சிறந்தது வேறு யாதுளது ?

திரு. முதலியாரவர்கள் குரு வணக்கமாக “மன்னம் பல வாழு வாழ்த்தியுனைப் போற்றுதற்கே, இன்னம் பலவாழு ளீ” (பாடல் 26) என்று பாடியுள்ளார்கள். அவ் வாக்கின் வாய்மைக்கு அவர்களே சான்றாக இன்னும் பல்லாண்டு இந்நில வுலகத்தில் வாழ்ந்து தமிழ்ப்பணி இயற்றிப் பலர்க்கும் உபகாரிகளாக இருந்து பெரும் புகழ் படைத்து விளங்கும் வண்ணம் இறைவன் திருவருள் துணை புரிவதாக.

அண்ணாமலைநகர்
15—9—1939.

மு. கதிரேசன்.




வெள்ளகால்
சுப்பிரமணிய முதலியார்

# தனிக்கவித் திரட்டு

## கடவுள் வாழ்த்து

### சிவ வணக்கம்.

தன்றிருத் தேவி கூந்தல் தனக்கியன் மணமின் றென்ன
அன்றுரைத் திடுநக் கீர னழற்கணு லழுங்கச் செய்து
தன்றுணை மனைபா லுள்ள தணிவிலன் பதனைக் காட்டும்
கொன்றையஞ் சடையார் கூத்தன் குரைகழல் பணிகு வாமால். 1

### சிவத் தியானம்.

திருவருடம் பதநோவத் தருவருடம் போற்றேன்பெய்
செங்காட் டீரேழ்
பெருவருடம் போய்மீண்டு வருவருடன் றிசைமுகத்துப் பிரமனுன
இருவருடன் றடிமுடிதே டொருவருடம் பரையுமையாட்
கீந்தார் தாள்சேர்
அருவருடம் பமதைமெய்யை மருவருடந் திடுவரவர்
அளிய நெஞ்சே. 2

திரு (- இலக்குமி) வருடு (கின்ற) அம் பதம். தரு (- மரங்கள்) வருடம் (- மழை). பெரு வருடம் - நீண்ட ஆண்டுகள். வரு(ப)வர் - இராமனுக அவதரித்த விட்டுணு. உடன்று - (ஒருவருடனெருவர்) கோபங்கொண்டு. உடம்பு அரை - பாதி உடலை. தாள் (- பாதத்தை) சேர் (- தியானிப்பாயாக). டம்பமதை (- டம்பத்தை) அருவரு (ப்பாயாக). மருவு. அருள் தந்திடுவர். அளிய (- அன்புடைய; காக்கத்தக்க).

## மதுரைச் சிவபிரான். — தோழிகூற்று.

மாசங்க ராசிவசி வாவிமலி கூடற்பூ
மாசங்க ராசிவசி வாவிமலி—மாசங்க
மத்தையன் மாலகல்வான் வாய்மணிற்றே டும்பரவா
மத்தையன் மாலகல்வான் வா. † 3

மா (- வண்டுகளும்) சங்க ராசி(களும்) வசி(க்கின்ற) வாவி மலி(ந்த) கூடல் (- மதுரைப்) பூமா, சங்கரா, சிவசிவா, விமலி (- சரசுவதி) மா (- இலக்குமி ஆகிய இருவர்) சங்கமத்து (முறையே - சேருதலை யுடைய) அயன் மால் (இருவரும் - முறையே) அகல் வான் வாய் (- விண்ணிடத்தும்) ம(ண்)ணில் (- மண்ணிடத்தும்) தேடும் பர(னே), வாம (- அழகுடைய) தையல் மால் (- மையல்) அகல்வான் (- நீங்கும்படி) வா - (அவளிடம்) வந்தருள்வாயாக.

## குற்றாலநாதர்.

திருக்குற்றா லத்திருக்குந் தீர்த்தன்பர்க் காகத்
திருக்குற்றா லத்திருக்குந் தீர்த்தன்—திருக்கு
மணிமா லையன்வணங்கு வான்மேரு வில்லான்
மணிமா லையன்வணங்கு வான். † 4

(அன்பர்) திருக்கு (உரூர், ஒருகால்) உற்றால், அத்திருக்கும் தீர்த்து (அந்த) அன்பர்க்காகத் திருக்குற்றாலத்து இருக்கும் தீர்த்தன். திருக்கு (- கண்) மணி மாலையன் (- உருத்திராக்க மாலையை உடையான்) வணங்கு - வளைகின்ற. வான் - பெரிய. மணி (- கருமை நிறமுடைய) மால் அயன் வணங்குவான்.

## திருமால்.

புலவர்களி யாரும் புயல்வண்ணன் மார்பு
மலைநிகரு மென்று வகுப்பர்—மலையலநேர்
தாமரையே நேரெனயான் சாற்றுவேன் ஏனென்னில்
தாமரையாள் வைகுதலாற் றான். 5

† வெண்பாவில் இதற்கதிகமாக மடக்குதற்கு இடமில்லாமை கவனிக்கத் தக்கது.

## உமை.

பின் வரும் பாட்டு, காவிய காம்பீரியமும் நாடக நயமும் உடையதாய் அருமையும் இனிமையும் விரவிய பலபல சிறப்புக்கள் அமைந்த செய்யுளாம். இதனில், ஐந்திணை மயக்கம் அமைக்கப் பெற்றிருக்கின்றது. இவ்வாறு ஐந்திணை மயக்கம் ஒருங்கமைந்த செய்யுள் யான் அறிந்தவரை ஒன்றே யுள்ளது. அது, காஞ்சிப் புராணம் நாட்டுப் படலத்து வரும் ‘கறிக்கொடியும்......வயங்கு மோர்பால்’ என்பது.

மேற்குறித்த பின் வரும் பாட்டு,—அருமையினும் அருமை யாக ஐந்திணை மயக்கமும் ஓரிடத்தே ஒருங்கே அமைக்கப்பெற் றிருப்பதனோடு அமையாமல், அதற்கு மேலாக, மகளிரால் மலரும் மரம் பத்துள் ஒரு பாதியாகவுள்ள ஐந்து மரம் அமைக்கப்பெற் றுளது; மேற்கொண்டு, விம்மிதத்தின்மேல் விம்மிதமாய், ஒன்பதி ரசங்களுள் ஒரு பாதிக்கும் அதிகமான சிருங்காரம் ஆசியம் கருணை இரௌத்திரம் அதிசயமென்ற ஐந்திரசங்களுக்கிடமாகவுமுள்ளது. மேற்கூறிய ஐந்து மரங்கள், மாதர் ஆட மலருகின்றதும் நெய்தல் நிலத்துக்கு உரியதுமான புன்னையும், அவர் அணைக்க மலர்கின்றதும் பாலைக்குரியதுமான குரவும், சிரித்தல் பார்த்தல் உதைத்தலாகிய செயல்களை அவர் செய்ய முறையே மலருவனவும், முல்லை மருதம் குறிஞ்சிக்குரியனவுமான முல்லையும் மாவும் அசோகமுமாம்.*

இனி, இவ் விளக்கமில்லாமலே, இம் மரங்களின் திணைகள் விளங்கும்படி பாட்டிலே மரங்களுக்கு அடைகள் கொடுத்திருப்பது நாலழகு பத்துள் ஒன்றான ‘விளங்க வைத்தல்’ ஆக இருக்கின் றது.

இனி, கனியினிய நன்னய நாடகக் காட்சி நம் மனக்கண் முன்னே நன்கு நிகழச் செய்யும் இப்பாட்டின் பொருள் வருமாறு:-

## விரிவுரை.

உமாதேவி, ஒருநாள் மாலையிலே ஒரு கடற்கரைச் சோலை யிலே தனியே உலாவுகின்றாள். அப்போது அங்கே கண்ணைக்

* மாமல்லாத முல்லையும் பெரும்பான்மைபற்றி மரமென மகளிரால் மலர் மரம் பத்துள் அடக்கப் பெற்றிருப்பது கவனிக்கத்தக்கது.

கவரும் புன்னை மரம் ஒன்றைக் கண்டு களிக்கின்றாள். களிக்கும் போது, அவள் உள்ளத்தே ஓர் இனிய எண்ணம் உதயமாகின்றது. அதாவது, இம்மரம், எனது தோழியர் தலைவி இலக்குமி தேவியின் இல்லமாகிய கடலகத்தின் முற்றமாகவுள்ள கடற்கரையில் நிற்பதனால், என் அன்புக்குரியதாகின்றது. யான் இனிதிருந்தாடுதற்கேற்பப் பூமியை அடுக்க வளைவாயிருக்கின்ற இதன் கிளையிலேயிருந்து ஊஞ்சலாடுவேனாக என்பது.

'என் நாயகன் கங்காதேவியாகிய பாவை போல்வாளைத் தலைமீது தரித்துச் சுடுகாட்டிலே ஆடுதல்போல, நீயும் சுடுகாடாகிய பாலைவனத்தில் "பாவை" என்ற பரியாய நாமமுடைய உன் பூ* உன் உச்சியில் விளங்கா நிற்கக் காற்றால் அலைக்கப்பட்டு ஆடுவாயாதலால், என் நாயகன் போல்வாய்: என்னால் தழுவத்தக்காய்' என்று, அடுக்க வளைந்திருந்த அதன் கொம்பைத் தனதடமழுந்தத் தழுவினாள். தழுவியவள், தன் எதிரே சற்றுத் தூரத்தே ஒரு மாமரத்தின்மேற் படர்ந்திருந்த முல்லைக் கொடியை நோக்கி, 'சீ! என்ன சிரிப்புக்கிடமான செய்கையைச் செய்தாய் !! வலியப்பற்றிப் புருடனை யணைந்தாயே !!!†' என்று, (தான் குராவங்கொம்பை அணைத்தது, வலிந்து புருடனை அணைந்ததாமென்பதை, தன் குற்றம் தனக்குத் தெரியா தென்றவாறு, உணராளாய்க்) குறுஞ் சிரிப்புச் சிரித்து, சூரபன்மன் மாமரமாக, அம்மரத்தைத் தன் குமாரனது வேல் உருவிச் சென்றதை நினைவு கூர்ந்து, அந்த முல்லை படர்ந்த மாமரத்தை அருட்கண் சாத்தி, தான் எட்டி உதைக்கும்படி கிட்ட நின்ற அசோக மரத்தை நோக்கிச் 'சேராக் காதலர் தீராச் சோகமுறும்படிசெய்யும் நீ உன் செயலுக்கு நேர் மாறான "அசோகம்" என்ற பெயர்பூண்டிருப்பது அக்கிரமம்' என்று உக்கிரமாகக் கோபித்து உதைக்க, அதனால் அசைக்கப் பெற்று ஆடும் புன்னைக் கிளையிலிருந்தவண்ணமே, அவ்வசோக மரத்தைத் திரும்பத் திரும்ப உதைத்து ஊஞ்சலாடுவாளானாள்.

* குரா மரத்தின் பூ, பாவைபோலிருத்தலால், 'பாவை' என்று பெயர் பெற்றதென்பர்,

† கொடிகளைப் பெண்களாகவும் அவை படரும் மரங்களைப் புருடராகவும் கூறுதல் கவி மரபு.

இவ்வாருக, தன்னுல் ஆடவும் அணைக்கவும் சிரிக்கவும் பார்க்கவும் உதைக்கவும் பெற்ற மரங்கள் பூத்தலைக் கண்டு அதிசயித்து மனம் உவகைபூத்த உமாதேவியின் உபய பாதங்களை உன்னி உய்தியுறுவோமாக.

பாட்டு.

என்றுமென் றேழிதிரு வாழுவரி மனைமுன்றி
லேயுமிது மீதிவர்ந்தா
டிடுவலென் றொருபுனைக் கிளையிரீஇப் பாவைதலை
யேந்திவெஞ் சுடுகாட்டிடை
நன்றுநின் றூடெனிறை புரைதியென வளைகுரவ
நாகிளங் கொம்பர்பற்றி
நகிலுற வணைத்துமரு தத்துமா * மீப்படரு
நறுவனத் தளவைவலியச்
சென்றுகொண் கனையணைந் தனையென்று புன்முறுவல்
செய்தந்த மாவையென்சேய்
செவ்வேள்செஃ றருவென்ன நோக்கியரு குறுவரைச்
செயலைதனை யென்கொலோ நீ
ஒன்றுவெஞ் சோகமே செய்தும்ம சோகமென
வுறலென வுதைத்தாடிட
உவையெலாம் பூப்பவுள் ளுவகைபூத் தருளுமுமை
உபயபத முன்னி யுய்வாம். 6

திரு - இலக்குமி. உவரி - கடல். முன்றில் - முற்றம். ஏயும் - பொருந்தும். இவர்ந்து - ஏறி. ஆடிடுவல் - ஆடுவேன். புனை - புன்னை. இரீஇ - இருந்து. பாவை - குரா மரப்பூ; பிரதிமை. சுடுகாடு - பாலைவனம்; மயானம். இறை - நாயகன் - கணவன். புரைதி - போல்வாய். நாகு இளங் கொம்பர் - மிக இளைதான கொம்பு. நகில் - கொங்கை. மீ - மேல். நறு - நல்ல; மணமுள்ள. வனம் - முல்லை நிலம். தளவு - முல்லைக்கொடி. கொண்கன் - கணவன். செஃறரு - செல்தரு - (உருவிச்) சென்ற மரம். வரைச்செயலை - குறிஞ்சி நிலத்துக்குரிய அசோக மரம். என்கொல் - ஏன். உவை - புன்னை முதலியவை. உள் - மனம். உவகை பூத்தல் - மகிழ்தல். உபய பதம் - இரண்டு பாதங்கள். உன்னி - தியானித்து. உய்வாம் - கடைத்தேறுவாம்.

* 'இம்மரம் (மாமரம்) பெரும்பாலும் மருதநிலத்துக்குரியது' மகா மகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் பதிப்பித்த குறுந்தொகை, நூலாராய்ச்சி 47-ம் பக்கம்.

## சுப்பிரமணியர்.

**சமஸ்கிருத கவியின் கருத்தை அடிப்படையாகக் கொண்டது.**

*கருவிமுகி லுலவுபூஞ் சோலையில் மாலையிற்,*
*காலைவரு கதிர்கள்கோடி*
*கவின்மிகூஉ மோருருக் கொண்டு, வேல் கொண்டெனக்,*
*காண்பவர்கள் கவலைப்பனி*
*ஒருவவொளிர் தற்கண்டு,* முகவனச மலர்வள்ளி*
*உபயதனம் வனைபொற்கலை*
*உயர்மலய வந்துசிறி தூற்றமொடு வீச,அகல்*
*வுற்றிடக் கண்டு,நெஞ்சம்*
*உருகிமிக மறுகவவள் கலைதனைப் போர்த்தலும்*
*ஒண்கடை யடைக்குமேல்வை*
*ஊடுறுகை நைபவன் கதவினைத் திறவென்ன*
*ஓதாது கைகையெனல் போல்*
*தருணவிரு முலையிடைப் பட்டிடார்ப் படுகண்கள்*
*தளராது துகில்நீவெனச்*
*சாற்றாது கண்கணென நகைசெயத் தையலைத்*
*தழுவுகுகன் அடிபணிகுவாம்.* 7

---

## குரு வணக்கம்

### திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர்.

*பன்னருஞ்சீர் மன்னம் பலவாண தேவேயான்,*
*உன்னடியார் கூட்டத் தொருவனென, — அன்னார்*
*மருங்காக வந்தானேன் ; மாமேரு வைச்சார்*
*கருங்காக மும்பொற்கா கம்.* 8

*எரிந்தார் பரசுமறி என்பரவ மாகி*
*கரந்தாயே னுஞ்,சங் கர,நிற் — றெரிந்தேன் :*
*மறுவேடம் பூண்டுருவ மாறியிருந் தாலும்,*
*அறியாதோ பிள்ளைதா யை.* 9

* *தற்கண்டு - தன்(முருக)னைக் கண்டு. வந்து - காற்று.*

என்றும்மா ருவுமையாள் இன்முலைசங் கேய்ந்தவடு,
இன்றுன்பாற் காணா இயல்பினால், — மன்றஅவை
மன்னா வடுவாய் மறைந்தவா றென் ? புகல்வாய்
என்னா வடுதுறைக்கோ வே. 10

வந்துபணி யன்பர் மலப்பகையை வென்றுவென்று
நந்துபிர தாபமும், நற்பதத்தைச் — சந்ததமும்
அன்னவர்க்கீந் தாம்புகழும், ஐய*செய்ய† ஆடைவெண்ணீ
றென்னநிற்சூழ்ந் தெய்தியன இங்கு. 11

எங்கணுங் கண்களெனக் கென்ப; அதற் கேற்ப,வேர்
பொங்குமக்க மாலை புனைந்தனையால், — அங்கதினார்
அக்கமணி யுள்மால் அணிந்தஅக்கம் எம்மணியாப்
புக்கதனை யெந்தாய் புகல். 12

நின்னருளின் வெள்ளம் நிமிர்ந்து பரந்தனது
பொன்னடியார் தம்மைப் பொதிந்ததனை — இன்னும்
தெரியாரே நின்னன்பர் செம்மேனி வெண்மை
பரவியது நீற்றானென் பார். 13

பொய்யன்று, மெய்யாம் புதுமையொன்று கேள் : நினது
கையதனின் மிக்கதுகால்! கையீந்த — வையகத்துச்
செல்வமே ஈந்திடும் : நின் சேவடியோ, வான்முத்திச்
செல்வம் அளிக்குமினி தே. 14

உள்ளதில்ல தாகவில்ல துள்ளதாச் செய்யவல்ல
வள்ளல்நீ யென்னுமுண்மை மற்றறிந்தேன் — விள்ளும்
உருவமத னுக்குருவம் ஒப்பி‡உரு வாவுன்
அருவமதை நீசெய்த தால். 15

பாசமது நீங்கியிட்ட பாக்கியவா னாயினேன் ;
பாசமக லாத பசுக்கள்தாம் — பாசம்
இயல்பா இலாதநினை எய்தப் பெறுதற்
கியலாத வேதுவினா னே. 16

* அழகிய. † சிவந்த. ‡ ஒட்டி.

பாசமது நீங்கியபின் பார்த்தேனோ நின்னை? அல்லால்
பாசமுனைக் காணப் பறைந்ததோ?* — ஈச,
திருவா வடுதுறைவாழ் தேவ, அருளே
உருவா வுடையாய், உரை. 17

காணவிய லாதநீ காணவந்தாய்; வந்துழியுங்
காணவிய லாதேனிற் கண்டனனால்: — தாணுவே,
ஓவுதலி லாவினையு மோவியிட்ட தின்கவிஞர்
நாவில்வளர் அம்பலவா ணா. 18

கொள்ளைநிதி ஊதியமாக் கொள்ளமுயல் வாணிகத்தில்
உள்ளமுத லும்மிழந்தோ னொப்பவே, — வள்ளலே,
உன்னை யடைவான் உனைநாடி யுற்றயான்,
என்னை யிழந்தேன்! ஈ தென் ? 19

அம்பலவா ணாவுன் அடிபணியாச் சென்னியின்(று.)உன்
பைம்புகழ்கூ றாதநாப் பாரிலின்று. — நம்பியுனை
எண்ணாத நெஞ்சின்(று.)உன் இன்னருட்கண் நோக்கிற்றீ
ரொண்ணாத பாவமுமின்று. 20

அவனி யிடைநின் அறக்கருணை நோக்கும்
நுவலும் மறக்கருணை நோக்குஞ் — சிவஞானம்
ஈந்துபந்த நீக்குமென்ப : யானறிய என்திறத்தும்
போந்தவை நி கழ்த்தாய் புரிந்து. 21

ஒருமான் சிரமேல் ஒருமான் புர†மேல்
ஒருமான் கரமேல் உறையும் — பெருமானே,
வா‡றை வடுதுறையாய், மற்றுன் அடிக்கீழ்ச்சீ
மாறையான் வாழவருள் வாய். 22

ஈச, நினைப் பூசிக்கும் யாமடக்க மெய்தியிடப்
பூசனையை நீயும் புரிவதுதான், — மாசில்
உமையைப் பிரிந்துமுன்னர் யோக முழந்த
தெமைநினைப் பூட்டியிடு மே. 23

* நீங்கியதோ. † புரம் – சரீரம். ‡ வான் – பெருமை (உடைய)

மலமியல்பா நீங்கும்அருள் வாரி,நினைச் சார்ந்தோர்,
மலமொழிவார் ; நீழலென்றும் மாறுப் — பலபொருளும்
வாரியினு ளேகலந்த மாத்திரமே தந்நீழல்
பூரணமா நீங்கிடுதல் போல். 24

அம்பலவா ணா,கேள்: அளக்கப் படாதபொருள்,
இம்பர்இரண் டே ; அவைகள் ஏவையெனில், — நம்ப,
ஒருபொருள் நின்னருள்,மற் றோர்பொருளோ, நாயேன்
அரிய பவமாகு மால். 25

உன்னடியை யன்றி உணரா உணர்வருள்உன்
பொன்னடியார்க் காகும் பொருளேநல்(கு) —என்னுளத்து
மன்னம் பலவாணா வாழ்த்தியுனைப் போற்றுதற்கே
இன்னம் பலவாணா ளீ. 26

காட்சிக் கெளிமையின்மை, காசினியாள் காவலர்க்கே
மாட்சிக் குறைவாம்:அம் மாசொழிப்பான்,—சூழ்ச்சியால்,
தேர்ந்தம் பலவாண தேசிகனு ரூர்த்தங்கொண்(டு)
ஆர்ந்தனன்முக் கட்பகவ னால். 27

சாதகம ழைத்துளியைச் சக்கரவா கம்வெயிலைத்
தீதில் சகோரம் திகழ்நிலவை — ஆதரவா
உண்டுய்யும் ; வண்டுறைசை ஓங்கீசன் இன்னருளே
கொண்டுய்யும் அன்பர் குழாம். 28

சிந்தைக் கினிது, செவிக்கினிது, வாய்க்கினிது,
வாந்தித் திடவினிது, மற்றெம்மைப் — பந்தித்த
வெம்பவநோய் தீர்த்தெமக்கு வீடாத வீடளிக்கும்
அம்பலவா ணன்சீ ரடி. 29

வெயில்வெருவித் தற்சேர்ந்தார் மீட்டுமதே வேட்கச்
செயுந்தண் பொழிற்றுறைசைச் சீரூர் — பயில்கல்விச்
செம்பலபா வாணர் தினமும் புகழ்கின்ற
அம்பலவா ணன்றன் அகம். 30

செஞ்சுடராஞ் சோதி தினம்விளக்கப் போதும்:இரா
விஞ்சிருள்நீக் கப்போதும் வெண்டிங்கள் :—நெஞ்சவிருள்
மாய்ச்சோட்ட வண்டுறைசை வாழ்பரம தேசிகனும்
தூச்சோதி யொன்றேபோ தும். 31

[ இவ் வெண்பாக்களில் ஒரு பகுதி, திருவாவடுதுறை ஆதின கர்த்தராய் 15 — ம் பட்டம்வகித்திருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகளை ஆசிரியர் தெரிசித்தபோது கூறியது. விடையருளும்படி வேண்டியபோது, தேசிகர், விபூதிப் பிரசாதத்தோடு பீதாம்பரம் அளிக்க, ஆசிரியர், 'அடியேன் பாதகாணிக்கை சமர்ப்பித்தது, சீடர்கள் ஆசாரியர்க்குச் செய்யவேண்டிய முறை. ஆசாரியர் சீடர்களுக்கு ஆசியளித்தலே மரபு, பரிசளிக்குங் கடப்பாடுடையரல்லர். ஆதலால், ஆசிமட்டும் அருளுக' என, தேசிகர், ' ஆசை*ப்பட்டு ( - விரும்பி ; பொற்பட்டு) க்கொடுக்கின்றேன், ஏற்றுக்கொள்க' என, ஆசிரியர் ' ஆசைப்பட்டு உடுத்தல் ( - திசைகளையே பட்டாக உடுத்தல் - நிர்வாணத்தன்மை), திகம்பரன் ( - திசைகளை வஸ்திரமாக உடையவன் - நிர்வாணி) என்ற சிவபிரானேயான சன்னிதானத்துக்கே தகும்' என, தேசிகர் மகிழ்ந்து பீதாம்பர சம்மானத்தை ஏற்றுக்கொள்ளும் படி வற்புறுத்தாமல் விபூதிப் பிரசாதத்துடன் விடையளித்தனர். ]

வேறு

வெருவா வடுபுலித் தோலோ டுமைவளை மென்கொங்கைசெய்
ஒருவா வடுவும் அடியார்வடுவு மொருங்கொழித்துக்
குருவா வடுத்தெங் குலமுழு துங்தொண்டு கொண்டபிரான்
திருவா வடுதுறை யம்பல வாண சிவக்கொழுந்தே. 32

## வைத்தீசுவரன் கோயில் மடபதியாயிருந்த பரமசிவத் தம்பிரான்.

வருமபுர வாதீனர் தமைநகைசெய் தெரித்தருள்சு வாமீயானைச்
சருமபுர வாதீனந் தாதாயென் றரற்பணிவாய் தகவக்கம்பூண்
மருமபுர வாதீனற் றுய்சேயை விடுமோவவ் வணமெற் காப்பாய்
தருமபுர வாதீனந் தழைக்கவரு பரமசிவத் தம்பிரானே. 33

வரும (த்தையுடைய முப்) புர (த்திலுள்ள) வாது ( - தருக்கப்போரை யுடைய ) ஈனர்; யானைச் சருமபுர ( - தோலணிந்த உடலுடைய) ஆதீ ( - முதல்வனே) நந்தாதாய் ( - கெடாதவனே); நம் தாதாய் எனலுமாம். அக் கம் ( - உருத்திராக்கம்) பூண் (ட) மரும ( - மார்பையுடையவனே); நற்றுய் புரவாது ஈன் (ற) சேயை விடுமோ ( - விடுவாளோ).

* ஆசை - விருப்பம் ; பொன் ; திக்கு.

# அறிவுரைகள்

## சருவ சன செபம் *

எவ்வெந் நாட்டினர், எவ்வெவ் வினத்தினர்,
எவ்வெம் †மதத்தின ரெனினும், ஆண் பெண்ணெனும்
இருபா லினர்க்கும் ஏற்ற பிரார்த்தனை :—

*ஒவ்வொர்கா ரணமும் உரியகா ரியத்தைச்*
*செய்தே தீரச் செய்குவ தெதுவோ,*
*நன்மையை நினைவார் நவில்வார் புரிவார்*
*நன்மையின் பயனை நண்ணச் செய்வதும்,*
*தீமையை உன்னுவார் செப்புவார் செய்வார்*
*தீமையின் பயனுறச் செய்வதும் எதுவோ,*

*அதனை[1] அகத்துள் அகலா தமைத்தே,*
*எண்ணுதல் இயம்புதல் இயற்றுத லென்னும்*
*முச்செயல் களினும் முயல்வே னுக.* (க)

* *சம்பத்துராய சயினரின் "எதிரிடைகள் இசைவுறுதல்"* ('Confluence of Opposites' by Champat Rai Jain) *என்னும் நூலின் இறுதிப் பகுதியை அடிப்படையாகக் கொண்டு வேண்டிய வேறுபாடுகளுடன் இயற்றியது. இது, தனி நூலாக வெளியாயிருக்கிறது.*

*†உண்மையி னும்முய ரொருமத மும்மிலை:*
*அனைத்துண் மையினுக் களவிலை யாதலால்,*
*உண்மை அனைத்தும் உடைய மதம் இலை;*
*உண்மை ஒன்றும் உறுமத மும்மிலை;*
*எம்மதம் எவ்வள வுண்மையொ டியையுமோ,*
*அம்மதம் அவ்வள வுயர்வின தாமால்;*
*மெய்யர் இவர்,பொய் வேடத் தினர்இவர்,*
*என்ன, ஐயுற வின்றி அறியுமா,*
*றுள்ளத் துள்ளதை உணரவல் லார்க்கலால்,*
*மற்றவர் உண்மை மதம்அறி வரிதால்;*
*மனிதனை மதத்தால் மதியா தொழுக்கால்*
*மதித்தலே உண்மை மதிப்பா குங்காண்:*
*'கருமமே யல்லது பிறிதென் கண்ட' தென்*
*றுரைசெய்* **கம்பன்** *உட்கருத் திதுவே.*

1 *பிரகிருதியென்னும் இயற்கை, நியதி, ஊழ், தரும சக்கரம், கடவுள் முதலிய பொருள்களுள் அவரவர் கொள்கைக் கியைந்த பொருளைக்குறித்தது.*

பசுக்கொலை செய்தப் பசுத்தோ லாற்செய்
செருப்பைத் தானம் செய்தல் போலத்,
தீபஎவ் வகையினும் தேடிய பொருளாற்
செய்யும்எத் தன்மமும் திண்ணமா அதன்மமே:

அதனால்,

அறமுறை திறம்பி[1] அறஞ்செயே னாக;
அறநெறி வழீஇப்[2] பொருள் ஆக்கே னாக;
அறவழி யன்றி இன் படையே னாக.

என்றும்,

நல்லோர் இணக்கமே நான் இணங் கிடுக;
நல்லோர் நினைவே நான் நினைந் திடுக;
நல்லோர் உரையே நான் உரைத் திடுக;
நல்லோர் நடையே நான் நடந் திடுக;
பிறர்நன் முறைகளைப் பேணிஎன் முறைகளா
ஆக்குதற் காசை அடைவே னாக. (உஉ)

உயிர்களை வருத்தல் ஒழிவே னாக;
உயிர்போ மெனினு மெய் உரைப்பே னாக;
களவினைக் கனவினும் கருதே னாக;
சூதா டெண்ணமும் துறப்பே[3] னாக;
மதியினை மயக்கிடும் மது முத லியவை
எதனையும் உட்கொளும் இழுக்கிலே னாக;
வாழ்க்கைத் துணைபா லன்றிமற் றவர்பாற்
காதல் உறுதல் கடிவே[4] னாக;
உயிரினும் மானம் ஓம்புவே[5] னாக;
இறப்பே னுயினும் இரவே னாக;
அயலவர் பொருளினை அவாவே[6] னாக;
அவர்கள்தம் வாழ்வுகண் டழுக்கறே[7] னாக;
அவர் செயும் நன்றியை அயர்த்திடே[8] னாக,
முன்பு பின் பவர்பழி மொழியே னாக;
எங்கணும் அவர் புகழ் இயம்புவே னாக;

1 தவறி. 2 வழுவி-தவறி. 3 வெறுத்துவிடுவேன். 4 நீக்குவேன்.
5 பாதுகாப்பேன். 6 விரும்பேன். 7 பொறாமை அடையேன். 8 மறவேன்.

அவர்குறை காண்டலிற் குருடனே னாக;
அவர் மறை[1] கேட்டலிற் செவிடனே னாக;
அவர்க் கின்னா[2] கூறலில் ஊமனே னாக;
அவர்க் கூறு[3] செய்தலில் முடவனே னாக;
அவர்கேடு சூழ்தலில் அறிவிலே னாக;
எனைக் கெடுத் தவர்க்கும் நன் றியற்றுவே னாக;
வைதவர் தம்மையும் வாழ்த்துவே னாக;
வெறுத்தவ ரெவரையும் விரும்புவே னாக;
ஒறுத்தவ[4] ருக்கும் உதவுவே னாக;
பகைவர்க்கும் அன்புசெய் பண்பினே னாக; *
இத்தனை நல்லொழுக் கியைந்துளே னென்று
பெருமைபா ராட்டிடும் பிழையிலே னாக: (சகூ)

வாழ்வு வரின் இறு மாந்திடே னாக;
தாழ்வுறு மெனின் மனந் தளர்ந்திடே னாக;
செய்தற் குரிய சிறிய கடனையும்,
எய்தற் குரிய பயனை எண் ணாமல்,
அப்பயன் அடைந்திட அவாவுவார் யாரினும்
விருப்பொடு செய்திடும் விழுமியே[5] னாக: (ருரு)

1 இரகசியம். 2 துன்பந்தருவன. 3 (அடித்தல், உதைத்தல் முதலிய) தீங்குகள். 4 வருத்தம் செய்தவர். 5 சிறப்புடையேன்.

* புத்தன் புகன்றருள் பொருள்போதி பொன்னுரை :—

பகையைப் பகையாற் பாற்ற முயலல்,
அழலை அழலால் அவித்தல் போலும்.
தழலை நீராற் றணித்தல் போல,
அன்பாற் பகையை ஆற்றலே ஏற்றதாம்.
பலத்தைக் கொண்டு பகைவனை வென்றோன்
உடலையே வென்றோன்; உளத்தைவென்றோனலன்.
அன்பாற் பகைவனை ஆட்கொண் டவனோ,
உடலோ டுள்ளமும் ஒருங்காட் கொண்டோன் :
பலத்தால் வெல்லப் பட்ட பகைவன்,
சமயம் வாய்க்குமேல், சவஞ்சா திப்பான் :
அன்பால் வெலப்பட் டாளா னவனோ,
உற்றுழி உதவும் நற்றுணை ஆவனே.

பாற்றுதல் - நீக்குதல்; அழித்தல். உற்றுழி - துன்புறு காலத்தில்.

என்னை எவரும் இகழினும் புகழினும்,
செல்வம் என்னைச் சேரினும் தீரினும்[1],
இன்றே இறக்கினும் என்றும் இருக்கினும்,
எவ்வெவ் இன்பையும் எய்துதற் கெனினும்,
எவ்வெத் துன்பையும் இரித்தற்[2] கெனினும்,
உண்மை வழுவி ஒழுகே னாக: (சுக)
'உள்ளின்[3] தன்மை உண்மை' யே ஆக,
'வாயின் தன்மை வாய்மை' யே ஆக,
'மெய்யின் தன்மை மெய்ம்மை' யே ஆக,
எண்ணம் சொல் செயல் யாவுமெய் ஆக,
உண்மையும் தோற்றமும் ஒன்றே ஆக,
ஒன்றையும் ஒளித்திடா துள்ளொடு புறம்ஒத்
தியற்று காரியமெலாம் இயற்று வேனாக: (சுஅ)
எவ்வுயிர் துன்புறக் காணினும் இரங்கி
அவ்வுயிர்க் குதவி ஆற்றுவே[4] னாக;
என்னுடை[5] நன்மைபோல் யாவர் நன்மைக்கும்
உழைத்திட ஊக்கம் உடையே னாக;
என்வாழ் நாளெலாம் இடையறா தினிதே
பிறர்க்கு நன் றாற்றிப் பெற்றிடும் இன்பால்
என்மனம் நிறைவினை எய்துவ தாக: (எரு)
எனை இகழ் வலியரை இறைஞ்சே[6] னாக;
ஆருயிர்[7] போவதற் கஞ்சே னாக;
அவ்வுயிர் வாழ்வினை அருவரே னாக;
வஞ்சகர், தீயர், தீ வழியிற் பிறராற்
செலுத்திடப் பட்டவர் திறத்தும்[8] என்மனம்
கோபம் சிறிதும் கொள்ளா தாக;
இச்சிறு தன்மைய ரெவருட னேனும்,
எச் செய லெனினும்யான் இயற்றிட நேருமேல்,
என்மனம் அமைதியை இழந்திடா தாக: (அச)

1 நீங்கினும். 2 ஓட்டுதற்கு. 3 மனத்தின். 4 செய்வேன். 5 என்னுடைய. 6 வணங்கேன். 7 அருமையான உயிர். 8 விஷயத்திலும்.

வருத்தம் என் மனத்தினை வருத்திடா தாக;
கடல்மலை வனம் இடு காடுகள் முதலா
வெருவிடு தனியிடம் மேவினே னாயினும்,
பாய்புலி பிடிக்கினும் பாம்பு கடிக்கினும்,
என்மனம் நடுக்கினை எய்திடா தாக;
அலையா உறுதியுற் றசைக்கவொண் ணேனாய்
வச்சிர[1] வெற்பென வற்பினை[2] உற்று,
விருப்புறு பொருள்கள் விட்டு விலகினும்,
வெறுப்புறு பொருள்கள் மேவிச் சேரினும்,
ஒழுக்கம் வழுக்கா[3] உளத்தே னாக. (கஉச)

ஒருயி ருந்துன் புற்றிடச் செய்யா
முதன்மை அறம்புவி முழுதும் பரம்புக.
துன்பம் எவ் வுயிரையும் துன்ன தொழிக.
பகையும் துயரும் பயமும் நீங்கி
எல்லா உயிர்களும் இன்பம் எய்துக.
அனைத்துயிர் களும் மன அமைதியை அடைக.
நன்மை எங் கெங்குமே நண்ணி ஓங் கிடுக.
தீமை எவ் வெவருமே செயவொணா தாக.
அறிவைப் பெருக்கலால், அருஞ்செயல் செயலால்,
பெறுதற் குரியநற் பேறுக ளெல்லாம்,
யாவரும் எய்தி இன்புடன் வாழ்க. (உரு)

தம் தாய் போற்றாய் இல்லை: தம் தாய்மொழி
எனத் தமக் காம்மொழி எம்மொழி யும் மிலை
என்று தாய் மொழியை எவரும் பேணுக. (உஅ)

உடற்றுன் புளத்துயர் உயிரைவிட் டொழிக.
பஞ்சமும் நோய்களும் பாரைவிட் டகல்க.
வேண்டிய பொழுதினில் வேண்டிய அளவில்
மிகாஅது குறையாது விண் மழை பொழிக.
ஆள்வார் முறைபிற ழாமே ஆள்க.

1 வயிர. 2 உறுதியை. 3 தவறாத.

நீதி பதிகள் நெறியில் நின்று
பேத மின்றி நீதி செய்க.
பற்பல மக்கட் பகுதியும் பகையற்
றொற்றுமை யுற்று நண் புடையராய் வாழ்க. (௱௰௭)

கொலைகள வாதிய கொடுந்தொழி லலாத
எந்தத் தொழிலும் இழிவில தென்றும்,
தொழில்புரி பவர்மனத் தூய்மைக் கியையத்
தொழில்தான் உயர்வினைத் துன்னிடு மென்றும்,
அவரவர் தமக்கிசை வாம் தொழில் செய்தல்
அறமா மென்றும், திறமா நம்பிக்
கல்வித் துறையிலோ, கைத்தொழில் முறையிலோ,
எதனி லெனினும், இடைவிடா துழைத்துப்
பிறந்த நாடு பெருமை அடையச்
சிறந்த செயல்கள் தம் திறமைக் கியன்றவா
றனைவரும் செய்குவா ராகி வாழ்க (௱௨௮)

மண்முழு வதும் ஒரு மனையா, மண்வாழ்
மக்கட் டொகுதி அம் மனைவளர் குடியா,
குணிப்பரு நாடர் அக் குடியில் உள் ளாரா,
(ஒருகுடி உள்ளவர் ஒருவரோ டொருவர்
போரா டிடலொரு போது மின்றி
அன்பொடு வாழ்தல் அறநெறி ஆதல்போல்.)
ஒருநாட் டினர் மற் றொருநாட் டினரோ
டமர்புரி வதை ஒழித் தன்பராய் வாழ்தல்
அறநெறி யென அறிந் தடைக நல் வாழ்வே. (௱௩௭)

## மெய்ஞ்ஞானம்.

பிறந்துபின் மூத்துநோய்க் குள்ளாகிச் செத்திடும்
பெற்றி யுடற்குணம்; இத்துன்பைத்
துறந்துதுக் கங்கல வாத சுகத்தினைத்
துய்ப்பிக்கும் மெய்ஞ்ஞானம் சூழ்வீரே. 35

சூழ்தல் - ஆராய்தல்.

## இந்துதேசச் சிறப்பு.

ஒருமலை யன்றோரா றன்று; பலமலை
யோடு பலநதி யுள்ளதுவாய்த்
திருமலி பன்னு டடங்குதே சம் பல
சேர்ந்துள திந்திய தேசமதே. 36

பிறப்பொடு மூப்புப் பிணியிறப் பச்சம்
பிடர்பிடித் துந்தப் பெருவிபவம்
வெறுத்துநல் ராச பதத்தைத் துறந்த
வியன்புத்தன் வாழ்ந்ததித் தேசமதே. 37

## முத்தி மார்க்கம்.

சாதன மாகிய ஓடத்தின் மீதேறிச்
சற்குரு வாகிய மாலுமியால்
போதன ஞான வழியோடப் பெற்றுப்
பொருந்தலாம் முத்திக் கரையினையே. 38

## துறவு.

மாநிலம் வீடு; வீசும் மருத்தல கிடுவோன்; மேலாம்
வானுறு முகில்தெ ளிக்கும்; மற்றணைக் கொணு விளக்காப்
பானுவும் மதியும் மீனும் பரந்தவான் முகட்டிற் றூங்கும்;
யான்மனை யாளன்; என்னெஞ் சில்லவள்; குறையென் எற்கே. 39

மருத்து - காற்று. அலகிடுதல் - பெருக்குதல். முகில் - மேகம். பானு - சூரியன். மீன் - நட்சத்திரம். எற்கு - எனக்கு.

## சிறந்த மதம்.

ஒருமதத் தையும்வி ரோதியா மல்மதம்
ஒன்றுக்கொன் றுள்ளபே தங்கள்தமைச்
சரிசெய்து சர்வ மதசாரம் யாவையும்
தன்பா லுளதே தகுந்தமதம். 40

## முயற்சியின் உயர்ச்சி.

தேனீ யினத்தினில் வேலைசெய் பெண்கள்
சிறந்திடும்; ஆண்கள் சிறப்பிலவாம்;
மாணுர்கள் வேலையால் மாண்புறு வார்கள்;
மடியுறும் மைந்தர் இழிவுறுவார். 41

மாண்பு - மகிமை. மடி - சோம்பல்.

சிறிதும் விடாத முயற்சிநற் காரிய
சித்தி யளித்திடும்; மெல்லெனப்பா
யுறுபுனல் கல்லைக் குழித்திடும்; சிற்றெறும்
பூர்தலாற் பாறைதேய் வுற்றிடுமே. 42

புனல் - நீர்.

அரணி கடைய, நெருப்பங் குதித்திடும்;
ஆழமாத் தோண்டிட, நீர்சுரக்கும்;
தரணியிற் காரிய சித்தியை எய்தலாம்,
சற்றும் விடாத முயற்சியினுல். 43

அரணி - தீக் கடை கோல். தரணி - பூமி.

சோம்பல் எதையும் செயற்கரி தாக்கும்;
சுறுசுறுப் பெல்லைதயும் செய்யஎளி
தாம்படி செய்திடும்: ஆதலாற் சோம்பல்
அகற்றி முயற்சி அடைவீரே. 44

வேலையில் லாமையை யாவர் மதிப்பார்?
வெறும்பெட் டியையார் விரும்பிடுவார்?
சீலநல் வேலை யுடைமை, சிறந்த
திருமணிப் பெட்டி செகமீதே. 45

சீலநல்வேலை - நல்லொழுக்கத்தோடுகூடிய வேலை.

சும்மா இருந்து துருப்பிடித்துத் தொலைவ தனினும் தொழில் மிகச்செய்
திம்மா நிலத்தே தேய்ந்தொழிதல் இரும்புக் கேற்ற மாமன்றே,
அம்மா திரியே சோம்பியிருந் தழியா மேநற் கருமங்கள்
செம்மா ணுடர்கள் செய்திளைத்துச் செத்துப் போதல் சிறப்பாமே.

### தொழிற் சிறப்பும் இழிவும்.

*எத்தொழி லுக்கு மதற்கென் றுரிய*
*இழிவென்ப தில்லை, சிறப்புமில்லை:*
*அத்தொழில் செய்வோன் மனநிலை தன்னாலே*
*ஆகும் இழிவல் லதுசிறப்பே.* 47

### சிறப்பளிப்பது பிறப்பன்று, அறிவும் ஒழுக்கமுமே.

*தேகபே தம்மன்றிச் சீவபே தம்மிலை:*
*சென்மத்தா லுண்மைச் சிறப்பெவர்க்கும்*
*ஆகுவ தில்லை: அறிவோ டொழுக்கஞ்சேர்ந்*
*தாலன்றி யாகிடா தச்சிறப்பே.* 48

### ஒழுக்க வகையும் பயனும்.

*நல்லொழுக் கத்துடன் வாழ்தலே நீடித்த*
*நல்வாழ்க்கை யாகும்; நடைபிறழ்ந்த*
*புல்லொழுக் கம்முடை யோர்நீடு வாழ்ந்தாலும்*
*பொன்றி னவர்களே யென்றறிவீர்.* 49

### ஊழும் உழைப்பும்.

*புலத்தை யுழுது விதைத்த லுழவன்*
*பொறுப்பாம்; அஃது புரியானேல்,*
*நலத்த மழைகுறை வின்றிப்பெய் திட்டாலும்*
*நற்பலன் பெற்றிடான் ஞாலத்திலே,* 50

*ஆதலா லூழின் படியெலா மாமென்*
*றமராமல், நாம்செய் அனைத்தினையும்*
*காதலா லேற்றகா லத்தினிற் செய்தல்*
*கடமையா மிந்தப் புடவியிலே.* 51

### பூரண நாகரிகம்.

*இராசர்க ளெல்லாரும் தங்களுள் நேரும்*
*இகலினைத் தம்மத் தியத்தர்கள்தாம்*
*தராசெனத் தீர்க்கத் துளிரத்தம் போரிற்சிந்*
*தாதுறல் பூரண நாகரிகம்.* 52

### உண்மை முதலியவற்றின் உயர்வு.

உண்மைக்கு மேலாம் மதமில்லை ; எல்லா
உயிர்க்கன்பின் மிக்கதோர் பத்தியில்லை ;
வண்மைக்கு மேலுப காரமிலை ; நல்
வசனத்தின் மேலுப சாரமிலை. 53

### நன்மை செய்யும் முறை.

நன்மையே செய்திட வேண்டும் சுயநலம்
நாடாமற் கீர்த்தியும் நாடாமல்
பன்மனி தர்க்குப காரமா மொன்றையே
பற்றிச் செயவேண்டும் பார்மீதே. 54

### உபகார வாழ்க்கையே உயர்வான வாழ்க்கை.

எவ்விடத் தெக்குலத் தெச்சம யத்தினில்
எய்தினு லுந்தனக் கும்பிறர்க்கும்
செவ்வுப காரமாய் வாழ்பவ னேஉயர்
சீருடையா னிந்தப் பாரிடையே. 55

பாரிடை - பூமியில்.

### பின்னோர் பலனடைய முன்னோர் உழைத்தல்.

' " அருத்தியாற் பழங்கள் நடுங்கிழ வா,நீ
அவைமர மாய்க்கனி தருங்கா(று)
இருத்தியோ" என்ற இளைஞு கேள்,
முன்னோ ரினிதுவைத் துளமரக் கனிகள்
திருத்தியா வயின்றேன் இளமையில், அந்தத்
தீர்த்திலாக் கடன்றனைத் தீர்ப்பான்,
விருத்தியாம் பின்னோர்க் குதவஇக் கனிகள்
வித்துகின் றேன்' என்றான் விருத்தன். 56

அருத்தி - ஆசை. வித்துதல் - விதைத்தல்.

## முன்னேற்றம்.

*மேற்செலுங் கூட்டத்தி னூடே யுள்ளவன்*
*மேற்செலா தேநின்று விட்டானேல்,*
*மேற்செலுங் கூட்டத்திற் றன்முன் நிலைமையும்*
*விட்டுப்பின் னாதல் மெய்யன்றோ,* 57

*அன்னது போலவே முன்னுக்குச் செல்பல*
*வாம்சா தியருளும் நாம்சோம்பி*
*முன்நட வாவிடிற் பின்னிடு வோம்;நல்*
*முயற்சியில் லாருக்(கு) உயர்ச்சியில்லை.* 58

## கோபத்தையொழித்தல்.

*நாமகிழ்ந் தாற்பரன் தானும் மகிழ்குவான்;*
*நாம்சினந் தாலவன் தான்சினப்பான்;*
*ஆமுண்மை தேர்ந்துகோ பத்தை யகற்றி*
*அகத்துக் களிப்பினை யாக்கிடுவீர்.* 59

## குற்றஞ்செய்யாமை.

*தண்டனை தப்பும் பொருட்டேகுற் றத்தினைத்*
*தாம் செய்யார், நெஞ்சிற்செய் தாராவார்:*
*தண்டனை யில்லையா னாலும்,குற் றஞ்செயாத்*
*தன்மையே நன்மை சகமீதே.* 60

## தீயசெயலினும் தீயசிந்தை தீயது.

*அடித்திடுங் கையினிற் பொல்லாது திட்டி*
*அதட்டிடும் நாக்(கு); அதிற் பொல்லாது*
*பொடித்திடப் பார்க்கும் கண் ; பொல்லாததனிற்*
*பொறாமல் வெகுண்டு புகையு நெஞ்சே.* 61

*வெகுண்டு - கோபித்து.*

## வீட்டிலக்கணம்.

*உள்ளும் புறமும் மிகுசுத்த மாகக்காற்*
*றோட்டம் வெளிச்சம் உளதாகி,*
*விள்ளுநீ ரூற்றொன்று மில்லாமல் வேண்டும்*
*விசால முளதேநல் வீடாகும்.* 62

### கணவன் மனைவி கருத்தோற்றுமை.

ஒருசிறை கொண்டு பறத்தல் ஒருகா
 லுடனே நடத்தலொண் ணாதனவாம்;
புருடன் மனைவி பொருந்தியில் வாழ்ந்திடும்
 புத்தியில் லாரெனிற் கெட்டிடுவார். 63

### பரிகலம் உண்ணுதல் படாதெனல்.

எச்சி லாக்கிய முடையவ ரென்னினும் அனையார்
எச்சி லாக்கிய அமிழ்தையு முண்டிட விழிவே. 64

### வாசால இலக்கணம்.

தனக்காயி னும்பிறர்க் காயினும் நன்மை
 தராதபேச் செப்போதும் சாற்றுமல்,
வனப் பாகியின்ப மளித்துப் பயன்படும்
 வார்த்தை வழங்கலே வாசாலம். 65

### மூடன்.

'ஏட பஞ்சபாண் டவர்களை யறிதியோ?' என்றவற் 'கியானஃ தறியா
மூடனோ? சொல்வென்: கேள்: கட் டிற் கால்கள்போல் மூவரே, பார்' என்று
நீடு கைவிர லிரண்டினைக் காட்டிப் பின் 'நிலத்தெழு திக்காட்டிப்
போடுவேன்' என்றான் றினைவரைந் தழித்தவன் போல்பவர் புவியினிற் பலரே. 66

### 'செல்வமென்பது சிந்தையின் நிறைவே'.

திருப்திய தில்லாத செல்வர் வறியர்;
 திருப்தி மருவிய சித்தமுள
தரித்திரர் திண்ணமாச் செல்வர்க ளே:இது 67
 சத்திய மிந்தத் தரணியிலே.

### 'தாழ்குலத்தா'ரை ஆதரித்தல்.

மிருகங் களுக்கும் இதஞ்செயு மாறு
 விதிக்கும் மதத்தி லுதித்த வியாம்
அருளின்றித் 'தாழ்குலத் தா'ரென்றி யாரையும்
 ஆதரியாமை யடாதது வே. 68

## அறிவுடையோர் குறைவும் நிறைவாம்.

*தளையுண்டுஞ் சுதந்தரந் தவிர்த்தி டாதவர்;*
*வளர்செல்வம் வாய்ந்தவர், வறுமை யெய்தினும்;*
*விளை எழில் மிகுந்தவர், விரூப ரெனினும்;*
*தெளிமனத் தறிவினுற் சிறந்து ளோர்களே.* 69

*தளை - விலங்கு. வறுமை - தரித்திரம். எழில் - அழகு.*

## ஆண் பாற் கற்பு.

*தம்மது மின்னூர்கள் கற்பைக்காக் கச்செய்து*
*தம்கற்பைக் காவாது தாமொழுகல்,*
*உம்மது நம்மது, நம்மது 'ஹே ஹே' என்(று)*
*ஊற்றைப்பற் காட்டிடல் ஒத்திடுமே.* 70

## வேசை விலக்கு.

*காமியராலும் வேசை யரைப்பலர்*
*காணச் சபைக்கழைக் கைநீதே:*
*மாமிசந் தின்றாலு மென்பைக் கழுத்தினில்*
*மாலையாய்ப் பூண்டுகொள் வாருண்டோ?* 71

*பாரில்நஞ் சுண்டவர் தம்மையே கொல்லும்;*
*பரத்தைய ராகிய பாழ்நஞ்சு,*
*நேரிலே கண்டாலும், நெஞ்சால் நினைந்தாலும்*
*நிச்சய மாய்க்கொல்லு மிச்சகத்தே.* 72

*போரில்முன் வைத்தகால் பின்வையா தேநின்று*
*போர் செய்வோர் வெல்வார்; பொதுமாதர்*
*நேரினில் நில்லாம லோடு பவர்களே*
*நிச்சயம் வெல்வார் நிலமீதே.* 73

## வாய் ஒன்றுயிருக்கக் கை காதுகள் இரண்டாயிருப்பதன் காரணம்.

*சம்பாதித் திடஇருகை தந்ததெய்வம்*
*ஒருவாயே தந்த நோக்கம்,*
*அன்பாகப் பிறர்க்களித்துத் தாமுந்துய்த்*
*திடலறமென் றறிவித் தற்காம்:*
*நம்பால்மூ டித்திறக்கும் ஒருவாயும்*
*இருகாதும் நாதன் தந்த(து)*
*இன்பாக யாவையும்கேட் டியம்பத்தக்*
*கனமட்டும் இயம்பு தற்கே.* 74

*துய்த்தல் - அனுபவித்தல். காது மூடாதென்பது குறிப்பு.*

## பழையன கழிதலும் புதியன புகுதலும்.

நல்லது நூதன மானாலும் நல்லதே;
அல்லது பூர்விக மானாலும்
பொல்லதே யென்று பகுத்துணர் கின்ற நற்
புத்திநல் வாழ்வுக்கு வித்தாமே. 75

## விநோதம்.

மாதினோர் கன்னத்தை முத்த,மற் றொன்றை
வழங்கினாள் ; மற்றிது, வான்கிறிஸ்து
நாதனோர் கன்னத் தறைந்தால்,மற் றொன்றையும்
நல்கென்ற வாறு நடத்தலன்றோ. 76

வழங்கல் - நல்கல் - கொடுத்தல்.

மனைத்தக் காட்கு மணாள னியம்புவான் :-
நினக்கின் றொன்று நிகழ்த்துவன் ; கேள்டீ !
எனக்கு முன்நீ யிறந்தனை யென்னில் யான்
உனைக்கொல் லாது விடேனிஃ துறுதியே. 77

## இன்புறச் செய்யும் இளைஞரும் கிழவரும்.

இளைஞர் பால்முதி யோரறி விருத்தல்காண் பிணிதே:
வளைபு மெய்கிழ மாகியும் மனங்கிழ மாகா
தொளிரு மூப்பினர் வயினிளை யோருழை விளங்கும்
உளவெ ழுச்சிகண் டிடுதலும் உவப்பின தாமால். 78

வளைபு - வளைந்து. வயின் - உழை - இடம்.

## புகழ் விரும்புவோர் சாவையும் துன்பையும் பொருட்படுத்தார்.

புகழொடோர் கடிகை போக்கல், புகழிலோ ராயுள் தன்னின்
மிகுநல முடைத்து; பண்டை வீரராய் மேன்மை பெற்றோர்,
இகலுறு மின்ப துன்பத் தினைநிறுத் திட்டுப் பார்த்துச்
சகமதில் மிகுதி நாடிச் சாகசஞ் செய்தி லாரரே. 79

கடிகை - நாழிகை. இகலுறும் - மாறுபடும். சாகசம் - துணிவான செயல்.

### இழிந்த துட்டர்க்கு இடங் கோடாமை.

*எட்டிற் குடுமியினை எட்டா விடிற்காலைக்*
*கிட்டிப் பிடிக்கின்ற கிழான—துட்டர்க்குத்*
*தப்புதற்கே யன்றோ தலைகால்கள் விண்பிலங்கட்*
*கப்புறத்தான் ஆனான் அரன் !* 80

*பிலம் - பாதாளம்.*

### தராதரம் அறியார் சகவாசம் விலக்கல்.

*ஆந்த ராதர மொன்று மறிகிலா*
*மாந்த ராதர மாதர்மேல் வைத்துளார்,*
*பூந்த ராதரப் பொன்படைத் தென்?பயன்*
*ஏந்த ராதர விப்புல்லர் நேயமே.* 81

*ஆம் தராதரம். மாந்தர் ஆதரம். பூந் தராதரம் (- மலை). பயன் - பிரயோசனம். பயம் (- நீர் - கங்கை). ஏந்து அரா (-சிவனே) தரல் (-தராதே)*

### பணத்தின் மகத்துவம்.

*எல்லாமும் வல்லவை என்ற பொருள்கள்*
*இரண்டே : அவைகள் எவைகளெனில்,*
*பல்லா யிரம்அண்ட மெல்லாம் படைத்த*
*பரம்பொருள் ஒன்று; பணம்*ஒன்றே.* 82

### ஆசாரச் சீர்திருத்தம்.

*சிசுப்பலி யீதல் உடன்கட்டை யேறல்*
*செதிள்குத்தி யாடல் முதலான*
*விசன வழக்கங்கள் கைவிடப் பட்டன*
*மேலோர்கள் செய்திட்ட வேலையினால்.* 83

### காலம் மாற ஆசாரம் மாறல்.

*முன்னை மிருதிகள் காலபே தத்தின்*
*முறைக்கிசை வாகவொன் றுக்கொன்று*
*மன்னுபே தத்தை யறிந்தோர்கள் காலங்கள்*
*மாறவா சாரமும் மாறுமென்பார்.* 84

* The Almighty Dollar.

### பரோபகாரமும் நல்லொழுக்கமும்.

பரர்க்குப காரம் புரிகுதல் ஈசன்
பணிவிடை யாகும்;இப் பார்தனிலே
விருத்தி யுறுநல் லொழுக்கம்,இம் மைக்கன்றி
மேலைக்கும் ஆகும் வியன்செல்வம். 85

### உத்தம தருமம்.

தருமமாப், புத்தக சாலை, கல் விச்சாலை,
தட்டாட லாதி விளையாட்டுக்
குரியதா னம், சோலை, வைத்திய சாலைகள்
உண்டு பணலுத் தமதருமம். 86

### அறிவோடு ஒழுக்கமுடையோரே பெரியோர்.

அறிவதில் லாத வொழுக்கம் பயனற்ற
தாகும்; ஒழுக்க மதுவில்லா
அறிவு மப்படி யே:ஒழுக் கத்தோ
டறிவுடை யோரே பெரியோர்கள். 87

### முழுப்பாக்கியம்.

முன்செய் கையைப்பற்றித் துக்கப் படவின்றி
முன்னித்தற் காலத்தின் பங்கள் தமை
நன்கு நுகர்ந்துபிற் காலத்துக் குப்பயம்
நண்ணுதவன் முழுப் பாக்கியவான். 88

### கும்மியடிக்கும் பெண்களுக் குவமை.

அவ்வோ டையினிரு பக்கம் மரக்கொம்
பணுகியொன் றாக அடர்ந்திடுதல்
செவ்வே*யெதிரெதிர் கும்மி அடி பெண்கள்
சேர நெருங்கும் செயல்போலும். 89

* நன்றாக.

### மெய்யறிவும் தன்னடக்கமும்.

*மெய்ம்மைதேர் அறிவினை மேவி யுள்ளவர்,*
*செம்மனப் பாக்கியச் சிறப்பின் ஒப்பிலார்;*
*தம்மைத்தாம் உடையர்;அத் தகைமை சார்கிலா*
*மம்மர்மன் னவரினும் சிறந்த மன்னரே.* 90

### இளமையும் முதுமையும்.

*பெருமரக்கலக் கூம்பிற்பாய் விரித்தும்பின் பெயர்த்தும்*
*துரிதவேலைசெய் இளையமீ காமனோ? சுக்கான்*
*வெருவ பாயச மயத்தினில் விவேகமே துணையா*
*அரிதி யக்கிடு முதியமா லுமிகொலோ அதிகன்.* 91

### நீதிக்கடமை.

*விண்ணி டிந்து விழுந்திடு மாயினும்*
*மண்ணில் நீதி வழங்கக் கடவதே.** 92

### அரிதரிது மானுட ராதலரிது.

**(ஆங்கில வாணர் கருத்தை அநுசரித்துக் கூறியது)**

*முருந்து புரைய விளங்கெயிற்று முழுமாமதிய முகத்தணங்கே,*
*தெரிந்த பொருள்க ளெவைகளினுஞ் சிறந்த பொருள்,மா னுடன்; அவனுள்*
*விரிந்து சுருங்கு மியலறிவே, மேலாம்; அதுவு முதிர்பயிற்சி*
*பொருந்தி மேலாம் நல்லொழுக்கம் பூண்டோன், புருடோத் தமனாமே.* 93

*முருந்து - மயிலிறகின் அடி. எயிறு - பல். மதிய முகம் - மதிபோலு முகம்.*

### ஆங்கில ராச்சியம்.

*உலகத்தெச் சக்கர வர்த்தி குடைநிழ*
*லுள்ளும் அடங்காது கொள்ளையிடம்*
*அலகற்ற தாய்க்கதிர் அத்தம னத்தை*
*அறியாத தாங்கிலர் ஆள்புவியே.* 94

*அலகு - அளவு. அகற்றும் - நீக்கும்.*

* 'Justice must be done, even though heaven should fall' என்பதன் மொழிபெயர்ப்பு.

## தேசத்தார் விழித்தெழத் தியானித்தல்.

(இரவீந்திரநாத தாகூர் எழுதிய கவியின் மொழிபெயர்ப்பு)

எங்கே இதயம் பயமில்லா திருக்கும்? நாணுல் தலை கவிழா(து)
எங்கே அறிவை எல்லாரு மெய்தலாம்? பல் லுட் பிரிவால்
எங்கே மாந்தர் சிதறுண்ணு திருப்பர்? உண்மை யினினின்றே
எங்கே வார்த்தை வெளிப்படும்? சற் றெனினும்
களைப்பே யில்லாதே, 95

எங்கே முயற்சி முழுத்தேர்ச்சி எய்தி யிடமேன் மேல்முயலும்?
எங்கே விவகா ரிகஞான மென்னுந் தெளிந்த நன் னீரா(று)
எங்கே டிழைக்கும் பழவழக்க மெனும்பாழ் மணல்வ ளுந்தரத்தே
எங்கே யெனினும் வழிதப்பி யிடாதே மேன்மே லேகலுறும்? 96

எங்கோ வேநின் னருள் தூண்டி யியக்கும் வழியே சென்றுமனம்
எங்கே யும்வி சாரிக்கும். எண்ணம் செயல்கள் புரிந்திடுவ(து)
எங்கே? இனைய நலமனைத்து மிலங்கும் பரம பதமிருப்ப(து)
எங்கே? அங்கே விழித்தெழுமா றெந்தாய்!
எந்நாட் டினர்க்கருளே. 97

## மருத்துவர்க்கு நல்ல மதி.

ஒரு பொருளைக் கவர வந்த களவாளியும் அதனைக் காத்து நின்ற காவலாளியும் மல்லுக்கட்டிப் போராடும்போது, ஒரு குருடன், காவலாளிக்குதவிசெய்யக் கருதித் தன்கைத் தடியால் ஒரு சமயம் களவாளியை அடித்தலும் மற்றொரு சமயம் காவலாளியையே அடித்தலும் செய்தாற்போல, நோயாளியின் உயிரைக் கவரவந்த நோயும் அதனைக் காத்துநிற்கும் உயிர்ச் சத்தியும் ( Vitality ) போராடுகையில்,அவைகளைக் கண்ணுல் காணமாட்டாத வைத்தியன், தன் கை மருந்தினுல் ஒரு சமயம் நோயைத் தாக்குதலும் மற்றொரு சமயம் உயிர்ச் சத்தியையே தாக்குதலும் செய்கின்றுன். இம் முறை, நோயும் பரிகாரமும் தோன்றிய அன்றுதொட்டு இன்று மட்டும் நடந்து வருகின்றது. நோயாளியினிடத்துக் காணப்படும் குணங்களில், இவை நோய் செய்வன, இவை உயிர்ச் சத்தி செய்வன என்று பகுத்தறியப்படாத சமயங்களில், வயித்தியம்

செய்தலைக்காட்டிலும் செய்யாதிருத்தலே சிறப்பானதென்று ஹக்ஸ்லி பண்டிதர் ஒரு மருத்துவ மாணவ சங்கத்தில் செய்த பிரசங்கத்தில் விரித்துக்கூறிய கருத்துக்களை ஆசிரியர் தமது கால்நடை மருத்துவ இலாகா உத்தியோகத் துறையில் மேற்கொண்டொழுகிய அனுபவத்தைக் கூறுகிறார்.

உயிர்ப றித்திட நோயொரு பால்உயி ரோம்ப வோர்பா
லுயிர்ச்சத் தியா இரு
வயவர் மற்சமர் செய்கையி லந்தக வயித்தியன், மருந்
துக்கழியா லொர்கால்
தயிரி யத்தொடு நோயையோர் காலுயிர்ச் சத்தியைப்புடைப்
பான்;பகை நண்புசெய்
செயல் பகுத்தறி யாச்சம யங்களிற் சிகிச்சை செய்தலிற்
செய்யாமை நன்றரோ. 98

ஓம்ப - காக்க. வயவர் - போர்வீரர். மற்சமர் - மற்போர். கழி - தடி - கம்பு. புடைத்தல் - அடித்தல். பகை நோயையும், நண்பு உயிர்ச் சத்தியையும் குறித்தன.

## பழகிய மரத்தை வெட்டலை விலக்கல்.

ஜார்ஜ் மாரிஸ் என்னும் அமெரிக்க கவிவாணர், தம் நண்பரொருவர் இளமையிலே பழகிய மரத்தை ஒரு விறகு விற்போன் வெட்டுதற்குக் கோடரி தீட்டுதலைப் பார்த்துத் திடுக்கிட்டு விரைந்துசென்று தடுத்து அவன் வேண்டும் பணங்கொடுத்து அதனை என்றும் அவன் வெட்டாதபடி அவன்பால் உறுதிப் பத்திரம் பெற்றது கண்டு, உளம் உருகிப் பரவசமாகிப் பாடிய ஆங்கிலப் பாக்களைப் படித்து மனமிளகி மகிழாத ஆங்கிலேயர் அரியர். ஆதலின், அவற்றின் கருத்துக்கள் நம்மவரையும் நெஞ்சுருகச் செய்யுமென்னும் நினைவு தூண்ட, ஆசிரியர் இம்மொழி பெயர்ப்பை இயற்றினர்.

விறகு விற் போயே! விறகு விற் போயே!
வியனுர் இம்மரம் வெட்டுதல் தவிர்தி.

இதன்சிறு கிளையையும் எறிதரேல்! எறிதரேல்!
இளமையி லெனக்கீ தின்னிழல் ஈந்தது,
ஆதலி னிதனையிவ் வமயம் காப்பல்யான்.
என்றூ தாதையெம் இல்லினுக் கெதிரே
தன் கையால் வைத்துத் தான்வளர்த் ததுவிது.
வைத்த இடத்தே மன்னுக. நின்கைக்
கோடரி கொண்டு குறைத்திட விடுகலேன்.
பண்டே பழகிய பழந்தரு; இதன்சீர்
பாரினுங் கடலினும் பரவிய (து.) இதனைநீ
எறிந்து வீழ்த்திட எண்ணலும் ஆமோ?
வெட்டிடு நினைவை விட்டிடு; மற்றிது
பலதலை முறைகள் பார்த்தபா தவம். இதன்
மண்பிணி யாக்கை மடிந்திடத் தடிந்திடேல்.

விண்பிணி விருப்பொடு மேக்கு நோக்கி
ஓங்குறு மிதுபிழைத் துய்ய அருளுதி.
தெரியாச் சிறுவனுச் சிறியேன் திரிநாள்
நளிர்தரு மிதன்னிழல் நாடி யமர்ந்துளேன்.
இதன்கீ ழாகவென் எழிலுடைத் தங்கையர்
மிகுகளி பொங்க விளையா டினர்கண்.
இதுவே அன்னை என்னைமுத் தாடிடம்.
தந்தை யென்னைத் தழீஇயது மித்தலம்.
இவையெலாம் நினைந்தென் னிருகண் பனிக்கும்
கண்ணீர் எளிமை கண்டெனை இகழேல்.
மன்ற இம்மரம் நின்றிட விடுதி.

என்றும் மறக்கொணு இனிய தாருவே!
மன்பழ நேய! நின் மரவுரி மானஎன்
இதயநார் நினைச்சூழ்ந் திறுகப் புல்லுமால்.
பழந்தரு வேநின் பாலுறீஇப் பறவைகள்
பாடுக. நின்கிளை ஆடுக. என்றும்
நெடும்புயற் கிடையாது நிலைநின் றுவாழி!

எறிதரேல் - வெட்டாதே. குறை - வெட்டு. நளிர் - குளிர். பனிக்கும் - துளிக்கும்.

தருஎறி பவஇத் தானம்விட் டே(கு.)இதைக்
காக்கஎன் கையுள காறும்
தீங்குநின் கோடரி செயஇய லாதே. 99

## மாதா, வாய் பேசா மகவினை வினவுதல்.

"Children's Magazine" என்னும் பத்திரிகையின் 1914 ஜனவரி மாதச் சஞ்சிகையில் வெளியான ஒரு பாடலின் கருத்தைத் தழுவியெழுதியது.

'துணிவுடைச் சிறுநர! சொல்லுதி இன்னே,
உன்னாற் பெறலாம் ஊதிய மென்னே!
என்பயன் நின்னு லென்ப தறியேன்?
சொல்ல வல்லையேல், சொல்லுதி ஒல்லே.
தாமரை யிதழெனத் தயங்குகை விரலாய்!
திங்களைச் சூழ்ந்து திகழ்கரு முகில்போற்
சுந்தர வதனஞ் சூழ்ந்து தொங்கி
இருண்டு சுருண்டெழில் எறிக்குங் குஞ்சியாய்!
ஒருநாள் போல உறுபல நாளும்நீ
செய்சிறு குறும்புக் கெய்தள விலையால்.
யாவது நின்னு லாவ தென்ன
உன்னாற் சொல்ல ஒல்லு மென்னில்,
நன்குசிந் தித்து நவிலுதி வல்லே,'
என்றேன்; என்றலும், இருசிற் றடிகள்
குறுகுறு நடந்தெனைக் குறுகியென் மடிமேல்
உற்றன. மிகுகளி ஒளிரெழில் இளவிழி
கூர்ந்தெனை நோக்கின. குறுநகை அரும்பின.
இருசிறு செங்கைகள் என்னிரு கதுப்பினை
இறுகுறப் பற்றியீர்த் தினிதின் அணைத்தன.
"உனது வினவுக் குறுவிடை கேட்டி.
அன்னாய்! யான்உனக் கன்பு செய்தலே
என்னு லாம்பயன்" எனல்போற்
பவளவாய் திறந்ததென் பாக்கியந் தானே. 100

இன்னே - இப்பொழுதே. ஊதியம் - லாபம். வல்லே - ஒல்லே - சீக்கிரம். எழில் - அழகு. கதுப்பு - கன்னம்.

## என் தாய்.

### (ஆங்கிலத்தினின்று மொழிபெயர்த்தது.)

*எனது பசி யாறத்தன் இன்முலைப்பா லூட்டி*
*எனதழுகை மாறிடக்கை யேந்தி - இனிதணைத்து*
*நாரொடுது யிற்றியென்கன் னத்துமுத்த மிட்டுவந்த(து)*
*யாரெனில்,என் றன்நற்றா யே.* 101

*நார் - அன்பு. துயிற்றி - துயில்வித்து - தூங்கச்செய்து.*

*யான்வீழ்ந்தா லோடிவந்துற் றென்வருத்தம் நீங்கவே*
*தேன்வீழ் இனியகதை செப்பியதும் - நான்வீழ்ந்த*
*பாரதனிற் பட்டஇடம் பார்த்துமுத்த மிட்டதுவும்*
*யாரெனில்,என் றன்நற்றா யே.* 102

*வீழ் - ஒத்த.*

*ஆ ஆ! உனக்கன் பகலேன்.அவ் வெண்ணமதும்*
*நோவே. அஃ தாற்றேன். நுவலின்றவன் - சாவாதே*
*நான்சிலநாள் வாழவைத்தால் நன்றியறி வோடுகைம்மா(று)*
*யான் செய்வேன், என்நற்றா யே.* 103

*விருத்தவய தால்நரைத்துன் மேனிதளர் காலம்*
*திரைத்தவுன்நற் கைக்கெனது செங்கை - பரித்திடூஉம்*
*ஊன்றுகோல் போலுதவ உன்வருத்த மாற்றிடுவேன்,*
*ஈன்றுகாத் திட்ட என்தா யே.* 104

*பரித்திடும் - தாங்கும்.*

*தாங்கருநோ வாலுன் றலைநிமிர்ந்து நில்லாதே*
*தூங்கிடுகால் யான்நீ துயில்படுக்கை - நீங்கலின்றி*
*நின்மெயினைக் காத்தன்பால் நெக்குவிழி நீர்சிந்தல்*
*என்முறையாம் என்நற்றா யே.* 105

# அகப்பொருள் துறை அமைந்த கவிகள்

---

ஊற்றுமலை ஜமீன்தார் *

மன்னவக்கி ரகநிலைமிக் கெய்தி ஞாலம்
மறுகுறச்செய் தாமினியவ் வையம் வாழ்வு
துன்னவக்கி ரகணியஞ்சார் தலைமேற் கொண்டு
தோற்றமுமேற் றமுமருவச் சொன்னத் தாற்செய்
நன்னவக்கி ரகமதனின் முறையின் மேவி
நண்பொடுறை வாமென்ன நனிநி னைந்து
மின்னவக்கி ரகமுறல்போன் மணிக ளொன்பான்
மிளிர்தருபொன் முடிமிலைந்த வேந்தர் வேந்தே. 106

மன்ன (- நிலையாக) வக்கிரகம் நிலை [- முறையின்றிய கோணலான (ஆகாய) நிலைகளில்.] துன்ன (- அடைய) அக்கிர (- சிறந்த) க(ண்)ணியம். சார்தலை - சேர்தலை; சார்ந்த (ஜமீன்தாரது) சிரசை. ந(ல்)ல நவ (- புதிய) கிரகம்( - வீடு). முறையின் (- வக்கிரமின்றிக்) கிரமமாக. மின் (னும்) நவ (- ஒன்பது) கிரகம் (- கோள்கள்).

சவியன்வ ரதனமிளிர் தங்கமுடி யாய்பொறுமை தன்னின் மிக்க
புவியனவ ரதனவிலும் புவியளந்தோ னடிதொழுதப் புவிபு ரப்பாய்
திவியனவ ரதனயக்கா வியமியம கந்திரிபு சிலேடை யாதி
கவியனவ ரதனன்கா யிதயால யாவெனிரு கண்ணேர் மாமா. 107

சவியன (- ஒளியையுடையன ஆகிய) அரதனம்.
புவி அ(ன்)ன வரத. நவிலும். புவி அளந்தோன் (ஆகிய திருமால்).
தி(வ்)விய (மான) நவரத (- ஒன்பதிரசங்களமைந்த) நய (மான).
கவி அனவரதம் நன்கு ஆய்.

பொன்பாவை யாரம் புயவித யாலய பூமனெனு
மின்பாவை வேல்விழி மானார் மதன வினியகவிக்
கன்பாவை யென்று பலராலுங் கேள்வியுற் றானந்தித்தென்
தன்பாவை யார்வத்துன் மேற்புனைந் தேனற் றயைபுரியே.† 108

* தாம் பிரபுவாகவுள்ள ஆசிரியர் மற்றொரு பிரபுமீது பாடிய இதன் † (இந்த 108-ம் பாட்டின்) பின்வரும் அகத்திணைப் பாட்டுக்கள், ஒரு சமயாசாரியான திருமங்கையாழ்வார் மற்றொரு சமயாசாரியான திருஞானசம்பந்த நாயனார் மீது பாடிய 'அனலால் வெந்த அங்கத்தைப் பூம்பாவை யாக்கினோமென்றிருக்குமது தகவன்று நிலவால் வெந்த இவளையுமோர் பெண்ணாக்கல் இயல்புதானே' என்பு தொடங்கிய பாட்டை நினைவுகூரச் செய்கின்றன.

### தோழி கூற்று.

*இவனிதையா லேயமருமிக் கெனவுன்மோ கத்துனைவ*
*தென்னென் றியான்சாற்*
*றுவனிதையா லேயமருனற் றிவெல்வயினு ருணர்ந்தலர்தூற்*
*றுகிரு ரங்தோ*
*வவனிதையா லேயமருவா ரெமவெனுநீ யிவளைவேட்*
*டாண்டிடாத*
*தெவனிதையா லேயமருதப் பேந்திரசிங் காராச*
*விசைவல் லோனே.* 109

இ(வ்) வனிதை (- பெண்) ஆலை அமரும் இக்கு (- கரும்பு). சாற்றுவன் இதை. ஆலை (- ஆலிலையை). வயின் - வயிறு. அவனி(யிலுள்ளார்)தயா லய - தயை லயமான. எவன் - ஏன்.

இவன், உவன், அவன், எவன் என்பவை அடிகளின் ஆரம்பத்தில் அமைக்கப்பெற்றிருப்பது அறியத்தக்கது.

*உகந்தவசந் தவிருதையா லேயமருதப் பாதவமா*
*ருவரி யாக்கொள்*
*சுகந்தவசந் தவிருதையா லேயமருதப் பாதவமாந்*
*துயரே லென்றேன்*
*அகந்தவசந் தவிருதையா லேயமருதப் பாதவமாங்*
*கணச்செய் தோய்மா*
*சிகந்தவசந் தவிருதையா லேயமருதப் பாதவமா*
*லிகை யீவாயே.* 110

உகந்து அவசம் (- தன்வசப்படாமையைத்) தவிரு. தையால் (- தையலே) ஐ (- அழகு) அமரு (கின்ற) தப்பு (- பறை) ஆதவம் (- ஒளி) ஆர் (ந்த) உவரியா (- கடலாக)க் கொள் சுகந்த (மான) வசந்த இருது (- பருவமதின்) ஐ (- தலைவன் - மன்மதன் செய்கின்ற) ஆலை (- கரும்பு) அமர் (- சண்டை) தப்பாது அவமாம் (- வீணும்). அகம் (- மனது) தவ(- மிகுதியாக) சந்து (- சமாதானம்) அவிர் (- விளங்கும்) உதையா (- சூரியனே). மருதப் பாதவம் (-மருதமரம்) லயம் ஆங்கு அ (ண்) ணச் செய்தோய். மாசு இகந்தவ (- நீங்கியவனே) சந்த (- அழகுடைய). தவ (த்தாற்பெறத்தக்க). மாலிகை (- மாலை). மூன்றாவதடியில், அகம் (- வீட்டில்) தவசம் (- தானியம் - தானிய லட்சுமி) தவிர் (- தங்கு) எனலுமாம்.

இந்தப் பாவினத்தில் இதனினும் நீண்ட திரிபுக்கு இடமில்லாமை கவனிக்கத்தக்கது. இந்தக் கவியிலும் இதற்கு முந்திய கவியிலும் 'ஒரு தையால்' என்ற 121-ம் கவியிலும் பாட்டுடைத் தலைவர் பெயர் திரிபிலமைக்கப்பட்டிருக்கின்றன.

தலைவி கூற்று.

காவீரை யம்பதி நெஞ்சசத்த ராயெனைக் கைவிடல்பாங்
காவீரை யம்பதி ஞான்மத னெய்யக் கருநிறநீங்
காவீரை யம்பதி கத்தொனி செய்யக் கலங்கினென்பூங்
காவீரை யம்பதி யாளித யாலய காவலரே. 111

காவீர் (- காப்பீராக) ஐயம் (- சந்தேகம்) பதி (ந்த). பாங்கா(க). ஈர் (- அறுக்கின்ற) ஐஅம்பு (- பஞ்சபாணம்). நீங்கா(த) வீரை (- கடல்) அம்பு (- நீர்). வீரை அம்பதி (- வீரகேரளம்புதூர்).

தோழியைத் தலைவி தூதுரைக்க வேண்டல்.

நேற்றுமலை யும்படிமன் மதனம்புங் காரிருளு நிலவுந் தென்றற்
காற்றுமலை கடலுமெனைப் படுத்தியசங் கடமெவராற் கணித்துக்கூறற்
பாற்றுமலை யமலைமுனி நிகரிருத யாலயபூ பாலனுன
ஊற்றுமலை மன்னவன்பான் மின்னரசே யென்னிலைமை யோதுவாயே. 112

தோழி கூற்று.

மாதரு மஞ்சனந் தீட்டிய கூரிய வாள்விழிசும்
மாதரு மஞ்சன மாநின் மேல்நிதம் வார்த்தனள்பூ
மாதரு மஞ்சன கைத்தல நீயி வளைமணந்தால்
மாதரு மஞ்சனம் போற்றித யாலய மாதவனே. 113

மாது அரும் அஞ்சனம். சும்மா (-பயனின்றித்) தரும் மஞ்சனம் (-மஞ்சன நீர்). பூமா. தரு (- கற்பகதரு) மஞ்சு (- மேகம்) அ(ன்)ன. மா(- பெரும்) தருமம்.

துரும்பவனி தையலர்தாய் பொன்றிரண மெனத்துறந்தோர் துதிக்க முத்தி
தரும்பவனி தையமகலா தவனிதயா லயநாமந் தரித்தோ னேற்று
வரும்பவனி தையலுறும் வம்புமுலைத் தையல்கண்டு மையல் கைம்மிக்
கரும்பவனி தைய ரெல்லா மலர்தூற்ற வாடியிருந் தயர்கின் றாளே. 114

அவனி துரும்பு. முத்தி தரும் பவன் (- சிவன்). வரும் (- வந்த) பவனி (யைத்) தையலுறும் (- தைக்கப்பட்ட) வம்பு (- கச்சு). கைம்மிக்கு (- அளவு கடந்து) அரும்ப, வனிதையர் (- பெண்கள்).

## செவிலி கூற்று.

மேதகவி ஞயகடா வெவற்றினுக்கு மேதகவாம் விடைகொ டுத்தஞ்
சாதகவி ஞயகருக் கருள்புரியுஞ் சாதகவி தயால யாகைப்
போதகவி ஞயகரா தியர்பதஞ்சேர் போதகநூ புரம ணிந்த
பாதகவி ஞயகன்னி தனைமணந்தாற் பாதகமோ பகர்ந்தி டாயே. 115

விஞ (வி)ய கடா ( - விஞ). அஞ்சாத கவி நாயகருக்கு. (துதிக்) கைப் போதகம் ( - யானை ஆன). சேர் ( - தியானிக்கும்) போதக - (உபதேச முடையவனே). பாத ( - த்தையுடைய) கவின் ஆய ( - அழகான).

கைக்கிளையா லலர்மேன்மங் கைக்கிளையா ளென்னுமொரு
காரி கைசேக்
கைக்கிளையா வனவுந்தொ கைக்கிளையா வையும்பிரிந்துங்
களித்து வாழ்தன்
கைக்கிளையாள் நின்பணிசெய் கைக்கிளையாள் கவலைமுளை
தன்னை யுன்செங்
கைக்கிளையா வாளைகமு கைக்கிளையாத் தாம்வீரை காக்குங்
கோவே. 116

கைக்கிளை - ஒருதலைக் காமம். மங்கைக்கு இளையாள். சேக்கை [ - பறவைக்கூடு (உள்ள)] கிளை ( - மரக்கிளை). தொகைக்கிளை - கூட்டமான சுற்றமான மற்றைய கிளிகள். கைக்கி(ள்)ளையாள் [ - ( தான் வளர்த்த கை(யில் ஏந்தும்) கிளியையுடையாள்.] பணி செய்கைக்கு இளையாள் (சலிக்கமாட்டாள்.) கவலை முளைதன்னை உன் செங்கைக் கிளையா [-(அவள் உன்னை மணவாளனாக அடையாததனால் ஏற்பட்ட) கவலை (வளர்ந்து பெரிய மரம்போல ஆகிவிடாமல் அதன்) முளை(யை) உன் செங்கை(யால்) கிள்(ளி)யெறிந்து தள்) ஐயா.] கிளையா ( - கிளைத்து ) த் தா ( வும் ).

இனமுறுமுத் தமவிழிக ணீலமல ரேய்ப்ப
இருதோண்மா ணிக்கங்கம் பொருவவிழை புரளும்
வனநகில்க ளரும்புப்ப ராகமண முளவேல்
மற்றவைநே ராகவிடை வயங்குகொடி மான
அனமிவர்கோ மேதகச்செய் மின்னுளுநன் மயலா
லலர்தூற்றிக் குலவயிடூ ரியம்பலுக்கஞ் சாதுன்
றனைமருவச் சிரத்தையுற்று ளின்பவள நிரம்பச்
சையநிகர் புயவிதயா லயதயைசெய் வாயே. 117

மாண் இக்கு அங்கம். அரும்பு,உள் பராகம் ( - மகரந்தம்). அ (ன்) னம் இவர் ( - ஏறும்) கோ ( - பிரமன்) மேதகச்செய் ( - மேன்மையாகச் சிருட்டித்த). குலவையிடுதல், குரவையிடுதலென்பதன் உலக வழக்கு. குலவையிடு ஊர் இயம்பல் - குலவையிட்டு (ப் பகிரங்கப்படுத்தி) ஊரார் அலர் தூற்றுதல். இன்ப வளம். சையம் - மலை.

இப்பாட்டில் முத்தம் (- முத்து) நீலம், மாணிக்கம், புட்பராகம், கோமேதகம், வயிடூரியம், வச்சிரம் (வயிரம்), பவளம், பச்சை (மரகதம்) என்ற நவரத்தினப் பெயர்கள் தொனியாக வருதல் காண்க.

## தோழி கூற்று.

பாமாலை பூண்டபுய பாரவித யாலயநீ
மாமாலை நீக்கி மருவாநாள் — பூமா
தருமஞ்ச னம்பெய்வான் றுமமுலை மேற்கண்
வருமஞ்ச னம்பெய்வாண் மான். 118

பூமாது (க்கு) அரு மஞ்சன் (- மைந்தன் - மன்மதன்) அம்பு எய்வான்; பூ (வில்வாழும்) மா (- இலக்குமி) தரும் (- பெற்ற) எனலுமாம். மான் (- பெண்)கண் வரும் (நீராகிய) மஞ்சனம் பெய்வாள்.

## பவனி வரக்கண்ட பாவையர் மெய்ப்பாடு.

ஆழி வளையா வதுகாறை யாகவது
சூழுமொட்டி யாணமாங் தோகையர்க்கே — வாழிதமிழ்ப்
போச னெனவெவரும் போற்றுமித யாலயமா
ராசன் பவனிவரு நாள். 119

ஆழி - மோதிரம். வளை - வளையல். முதலாம் ‘அது’ வளையைச் சுட்டும்; இரண்டாம் ‘அது’ காறையைச் சுட்டும். உடல் மெலிய, மாதர் அணிந்திருந்த ஆபரணம் பெருகித் தோன்றியது என்பது கருத்து.

## விநோத கவி.

கனகமுகை வாட்டுகளக் காரிகையார் தேமற்
கனகமுகைத் தேருறுகொங் கைக்கோ — கனகமுகை
மன்னிரவிக் கையகலா மற்பொருந்தி யும்மலரா
தென்னிருத யாலயகோ வே. 120

கன கமுகை. களம் - கழுத்து. தேமல் கனகம் (- பொன்போலுந் தேமல்) உகைத்து (- ஏறி) ஏர் (- அழகு). கோகனக முகை (- தாமரை யரும்பு). இரவி (- சூரியனது) கை (- கிரணம்); இரவிக்கை (- கச்சு). அலராது. (இது) என் ?

### வாழ்த்துக்கவி.

ஒருதையா லையலுற்ற வஞ்சகத்து வெஞ்சகட்டை
யுதைத்த வெள்ளை
யெருதையா லையங்கூரு மூர்திவீற் றிருக்குமிட
மெனக்கொ ளீசன்
கருதையா லயமாகத் தன்னிதய மதைக்கொண்ட
கார ணத்தால்
இருதையா லையப்பெயர்கொ ளேந்தலையவ் விறைகாக்க
வினிது மாதோ. 121

ஓர் உதையால் அயலுற்ற. வெள்ளை எருதை ஊர்தி, (கல்) ஆலை இடம். கருது (கின்ற) ஐ ( - அழகிய) ஆலயமா(க).

### செவிலி கூற்று :- மன்மதனியல் புரைத்தது.

காந்தனைமின் சேரிலிராக் காலமிராக் காலமாம்
வாய்ந்தநிலாக் காலமு மற்றதுவாம்—காந்தனையிந்
நங்கையுறு நாளின்மறு நாட்பகலி ராத்திரியாம்
அங்கசவேள் தன்செயலி தால். 122

காந்தன் - கணவன். இராக்காலம் - இரவு; இராத காலம். நிலாக்காலம் - நிலவு உள்ள காலம்; நில்லாத காலம். இராத்திரி - இரவு; இல்லாத திரி - செத்தபெண் (போல்வாள்.)

### பரத்தைய ரியல் புரைத்தது.

கோவியர் நிறையை மாயவ னழித்த
கொடுமையி னுலும்வேய் வனத்து
மேவிய மகளிர் நிறையினை யீசன்
விலக்குதீ மையினுங்கொ லன்னூர்
தேவிய ரென்ன அவர்கைமங் கலநாண்
திருவுறப் பூண்டெழு தாத
ஓவிய நிகர்த்த வேசையர் நிறையை
உலகினர் தினமழிப் பதுவே. 123

வேய்வனம் - மூங்கிற்காடு—தாருகாவனம்,

## நலம் பாராட்டல்.

கறையால் தனது கவின்குறைதல் நீங்க
நிறைமா மதியம் நினைந்தக் - கறையைப்
புருவம்விழி கத்தூரிப் பொட்டாக்கிக் கொண்டித்
திருவதன மாகவுற்ற தே. 124

முலைமலைமேற் றோன்று முகமா மதியைக்
கலைமதியா மென்று கருதி—முலைமலைக்கீழ்
உற்ற வுரோம வொழுங்கொடிடை யல்குலென
முற்று மரவங்கள் மூன்று. 125

அல்குலுக்கு - (அரைக்கு)ப் பாம்புப்படம் உவமை.

## அறத்தோடு நிற்றல் :- புனல்தரு புணர்ச்சி.

நாமவெள்ளத் துள்விழுந்து நான்சா மளவிலவர்
தாமவெள்ளத் துள்விழுந்து தப்புவித்தார்—காமவெள்ளத்
தாழ்ந்திறக்கு மென்னைமின்னே யவ்வெள்ளத் துள்ளவரும்
வீழ்ந்துதப்பு விக்க விளம்பு. 126

நாமம் - அச்சம் (விளக்கும்.)

---

# பல சந்தர்ப்பங்களில் பாடியவை.

---

## பெருங்குளத்துப் பண்டார சன்னிதிகளைத் தரிசித்து அவரளித்த விருந்தில் கூறியது.

நன்கருடனையனத்தை நாடுநர்க்கீ வோனெனக்கு
நன்கருடனையனத்தை நல்கினன் - அங்கி
தருங்குளத்தி ருக்குஞ் சடையுங் கரந்து
பெருங்குளத்தி ருக்கும் பிரான். 127

நன் கருடனை (வாகனமாகவுடைய விட்டுணு பதவியையும்)
அ(ன்)னத்தை (வாகனமாகவுடைய பிரம பதவியையும்.) நன்கு அருள்தனை
அ(ன்)னத்தை. அங்கி ( - அக்கினி) தரும் குளத்திருக்கு ( - நெற்றிக் கண்);

## இராசவல்லிபுரம் முத்துசாமியா பிள்ளை குமாரன் திருமணத்தில் கூறியது.

*இதுவரையும் வதுவரரா யினவ ரெவ்வெங் நலமெவள வெய்தி னர்செய்*
*யதுவரைநி கருமெய்ய ரருளாலவ் வங்கலமவ் வளவுந் திண்டோட்*
*புதுவரைமுத் துச்சாமி யருளியபா புவிநாச பூமான் வேட்ட*
*விதுவரைநேர் நன்னுதலாள் சிவகாமி மின்னொடென் றும் மேவி வாழி.* 128

*வதுவரர் - மணமக்கள். செய்ய (- சிவந்த) துவரை (- பவளத்தை). தோள் (ஆகிய) புது (மையையுடைய) வரை (- மலையையுடைய). விது அரை (- அரைவிது - எட்டாம் பிறை.)*

## இராசவல்லிபுரம் முத்துசாமியா பிள்ளைக்கு ஒரு வெகுமதிப் பொருள் அனுப்பியபோது எழுதியது.

*இதிராசை மாநகரத் தேந்தன்முத்து சாமிக்*
*கெதிராசை யெங்கு மிலாது - முதிராசை*
*பெற்றவெள்ள காற்சுப் பிரமணியன் ஞாபகத்தி*
*னுற்றசின்ன மாத்தந்த து.* 129

*இது (- இந்த வெகுமதி) இராசை மாநகர் - இராசவல்லிபுரம். எதிர் ஆசை (- திசை) எங்குமிலாது - எதிர் எந்தத் திசையிலும் இல்லாத படி. முதிர் (ந்த) ஆசை (- அன்பு) பெற்ற.*

## பாட்டிற் குறித்த நண்பருடன் ஆசிரியர் கருவைநல்லூர்க் கோவிலுக்குச் சென்ற சமயத்திற் கூறியது.

*கருவையா னகமிவர்வீர் தொலைப்பிரெனும் நெல்லையப்ப கவிஞர் கோமான்*
*கருவையா னகப்பணக்கண் ணார்மகிழ்முத் துச்சாமி காமா நீநி*
*கருவையா னகமுறழ்தோ ளிவற்கெனுங்கு மரசாமி கடைய னேன்றென்*
*கருவையா னகமொலிகோ யிலைச்சுப்ர மண்யனொடுங் கண்டோர் மன்னே.* 130

*ஆன் அகம் (- ரிஷபத்தின் மீது) இவர்வீர் (- ஏறி அதைச் செலுத்தும் சிவபெருமானே) கருவை (- பிறவியை). கரு (- கரிய) வை (- கூர்மையான) கப்பணம் (- கைவேல்). நிகருவையா (- ஒப்பாகுவையா) நகம் (- மலையுடன்). உறழ் - மாறுபட்ட. தென் (- அழகிய) கருவை (- கருவைநல்லூர்) ஆனகம் (- துந்துபி யெனும் வாத்தியம்).*

*தோள் (உடைய) இவற்கு நிகருவையா எனக் கூட்டுக.*

வீரசிகாமணியூரை மேற்கூறிய அன்பருடன் அடைந்தபோது கூறியது.

*மாரசி காமகிழ் வெய்திட நாமின்று வந்தபதி*
*கூரசி காநிகர் கட்குழ லார்புரி கூத்தெனச்சிங்*
*காரசி காவள மாநட னஞ்செய் கவின்குலவும்*
*வீரசி காமணி யாமுத்து சாமி விதரணனே.* 131

*மா (- பெரிய) ரசிகா. கூர்(மையான) அசி (வாள்போலும்) கண் (களையும்) கா [- (இருள்படத்தழைத்த) சோலை] நிகர் குழலார் (- கூந்தலையுமுடைய பெண்கள்). சிங்கார(மான) சிகாவளம் (- மயில்). கவின் (- அழகு). விதரணன் - கொடையாளன்.*

இராமலிங்கமையரேன்ற விகட கவியைப் பாராட்டிக் கூறியது.

*சைவமுத்து சாமி சபைக்கண் ணிராமலிங்கம்*
*செய்விகடங் கண்டு சிரித்திட்டான்—மைவளருங்*
*கண்டன். அது காணார், கருதார் புரமெரிக்கப்*
*பண்டரன் நகைத்தனனென் பார்.* 132

சிவகிரி ஜமீன்தார் சின்னத்தம்பித் தேவர் பெண் குழந்தை இறந்தபோது கூறியது.

*புத்திரிவி யோகப் புயல்மறைப்ப வாடியதால்*
*நத்துசின்னத் தம்பிமுக நாட்கமலஞ்—சற்றும்*
*பொருமலைநெஞ் சேசிறிது போதுசென்று லன்னான்*
*திருமுகமுன் போலொளிருந் தேர்.* 133

*வியோகம் - மரணம். நத்து - விரும்பு. நாட்கமலம் - அன்று பூத்த புதிய தாமரைப் பூ. பொருமலை - பொருமாதே - துன்புறாதே.*

ஒரு வடமொழி வாணர் திருவாங்கூர் அரசரை முதன் முதற் பார்த்தபோது பாடியதன் மொழிபெயர்ப்பு.

*எங்குமென்றுஞ் சேரநின்சீ ரென்னுமுழுத் திங்கணிலாய்ப்*
*பொங்குதிதி யாவையும் பூரணை யாத்—தங்குவித்த(து)*
*ஏகா தசியொன்று மென்மனைநீங் காதுளதஃ*
*தேகா றருள்புரிதி யே.* 134

*நிலாய் - நிலவி - பிரகாசித்து. பூரணை - பௌர்ணிமி.*

இறுதியில் அவர் விடைபெறும்போது பாடியதன் மொழிபெயர்ப்பு.

*நேசனொருவன் வந்து நேயபர தேயமதி*
*லாசையொடு தேடுதிபொன் ஆங்குணில்விற்—பேசுமொரு*
*பொற்கொடிமுன் றிற்கண்முத்தம் போதவுகுக் கின்றதென்றான்*
*விற்கொடிமன் னேதா விடை.* 135

*பொற்கொடி (போன்றவள்) - மனைவி. கண்முத்தம் (ஆகிய கண்ணீர்).*

'கர்னல் ஆல்காட்' என்பவர் செய்த பிரசங்கத்தை வியந்தது.

*திருவள ரிந்து தேயத்தின் குடபாற் சேயபல் யோசனைக் கப்பாற்*
*றிகழ்தரு நாக ரீகயூ னைட்டட் ஸ்டேட்டெனுஞ்*
*செனனபூ மியினைத்*
*துருவுநற் கிளையை யளவில்செல் வத்தைத் துத்திய*
*வுத்தியோ கத்தைச்*
*சூழுநே யருடன் வாழுமின் பத்தைத் துறந்துல*
*கோர்தமுட் புலத்து*
*மருவுமெய்த் தெய்வ பத்திமைப் பைங்கூழ் வளர்ந்தருட்*
*பேறெனும் பலனை*
*வழங்கிடக் கருதிப் பிரசங்க மழையை வயின்றொறும்*
*வருடித்து வரல்போல்*
*தருபுகழ் நெல்லைத் தலத்தினும் பொழிகந் தரமெனுங்*
*கர்னல்ஆல்க் காட்டாந்*
*தத்துவ ஞான சபைத்தலை வற்குச் சகஞ்செய்கைம்*
*மாறெவ னுளதே.* 136

*குடபால் - மேல்பாகத்தில். சேய - (நெடுந்) தொலைவான. கிளை(ஞர்) - உறவு(டையார்). உட்புலம் - மனமாகிய வயல். கூழ் - பயிர். கந்தரம் - மேகம். எவன் - யாது.*

*இருமையின் பயனை யேவரு மெய்த இன்னருள் கூர்ந்துநம்*
*பெரியோர்*
*இசைத்தசாத் திரவா ரிதியினுள் தம்ப மெனக்கலை*
*மதிநிறீஇ இன்பந்*
*தருமரு முயற்சி மந்தரஞ் சேர்த்தித் தணவிலன்*
*பெனுமணித் தாம்பாற்*
*சகத்தராம் புலவர் தம்பொருட் டிந்நாள் தத்துவ*
*ஞானவா ரமிழ்தை*

வருபெருஞ் சிரமத் தினைமதி யாது மதித்தெடுத்
தன்னவர் செவியாம்
வாயினுண் ணுதல்செய் தேயுமஞ் ஞான மரணத்தின்
நீங்குபு மன்னச்
சுருதிசேர் நாவாந் தருவியா லிந்தத் தொல்புவி
யினில்வழங் கினனால்
துகளிலாக் கர்னல் ஹென்றியெஸ் ஆல்க்காட் துரையென
விளங்கும்வெண் மாலே. 137

வாரிதி - கடல். (16) கலை (கலையுடைய) மதி ( - சந்திரன்); (64) கலை (கலைப்பற்றி ஞானமுடைய) மதி (- அறிவு). மந்தரம் - (இங்கே) மத்து. தாம்பு-கயிறு. தருவி - அகப்பை. 'கடல் கடைந்திடச் செல்லுறூஉம் வெள்ளைமால்' (காஞ்சிப்புராணம்).

டாக்டர் உ. வே. சாமிநாதையருக்கு
மகா மகோபாத்தியாயப் பட்டம் கிடைத்தபோது பாடியது.

பலர்புகழ் மகாமகோ பாத்யாய பட்டம்
இலகுயர்வு நிற்கீந்த தென்பர் —சிலரே
மிகுசான்றோர் அஃதுன்னை மேயுயர்ந்த தென்பர்
தகுசாமி நாதநீ தா. 138

உன்னையறி யாத்தமிழ ருண்டோவப் பட்டப்பேர்
தன்னையறி யாதவரோ சங்கையிலர்—என்னிலையம்
என்னையது நின்னையெய்தி யெய்ந்ததுயர் வென்பதற்குத்
தன்னிகரில் சாமிநா தா. 139

குரவர்கள் பலரா லன்னார் குழுவுளே பெரியோர் சில்லோர்
விரவும்அப் பெரியோர் தம்மின் மேலவன் நீயே யென்று
தெரிதந்து மகாம கோபாத் தியாயவான் பட்டம் உன்னை
உரிமையின் நாடி யுற்ற தொண்டமி ழகத்து மாதோ. 140

குரவர் - ஆசிரியர், குழு - கூட்டம்.

கோப்பெருந் தமிழ் மடந்தை சுயம்வரம் குறித்துப் பூவின்
மீப்பொலி புலவ ரெல்லாம் விடுத்துமே தகுநி னக்கே
மாப்பெருங் குரவப் பட்ட வண்மண மாலை வேய்ந்தாள்
ஏற்பஇஃ தறியா ரேவேங் தீந்ததம் மாலை யென்பார். 141

ஷையார் ஒரு நிருபத்தில் ஆசிரியரைப் பாராட்டியதைப்பற்றி எழுதியது.

முன்னும்பண் டிதர்களுண்முன் னுஞ்சாமி நாதவுயர்
முனிவர் கோவே
பின்னுன யான்கல்விப் பெருக்கிெனுடு கவிவன்மை பெரிது
முள்ளேன்
என்னுநீ விடுத்ததிரு முகமதனி னகமகிழ்வொ டிசைத்த
போதே
பன்னுளு நனிமுயன்று பயின்றளியன் படைத்தகல்விப்
பயன்பெற் றேனே. 142

அருணுசலக் கவிராயருக்கு எழுதியது.

தன்புத்தி வந்துசம் பாதனஞ் செய்திடுஞ் சத்திவந்து
பின்புத்தி யோகமும் வந்தபின் செய்விப்பன் பெட்குமணம்
என்புத்தி ரற்கென் றவைவந்த பின்பலீ தியற்று வித்தாய்
அன்புத்தி ரத்தினருணு சலநின் னறிவு நன்றே. 143

பின்பு உத்தியோகமும். பெட்கும் - விரும்பும். என் புத்திரற்கு. திரத்தின் - நிலைவரமுடைய.

ஆசிரியரது சீமந்த அழைப்பைப் பெற்றபோது மு. ரா. அருணுசலக் கவிராயர் அம்முகூர்த்தத்திற்கு வர இயலாமையைத் தெரிவித்துக் கவிகளனுப்ப அவற்றுக்கு விடையாக விடுத்த பாட்டுக்கள்.

நிசந்தவரு ணுசலாச் சருகெனமெய் மெலியஇள நீரும்பாலும்
கசந்தவரு ணுசலா கையெனவறள் மயற்றகையைக் கையிற் சங்கார்
பசந்தவரு ணுசலா மிதழமுதாற் றீர்த்தருட்கண் பாரென் றோதும்
வசந்தவரு ணுசலா எனதிதயம் அகலாப்பா வாணர்கோவே. 144

நிசம் (ஆகத்) தவர் (- தவம் செய்வோர்) உண் (கின்ற) ஆசு (-குற்றம்) அ (ல்) லா. கசந்தவர் (- உன்மீது கொண்ட மோகத்தால் கசந்தபெண்கள்) உள்ளா (க்குஇருப்புச்) சலாகை. மயல் தகையை (- மையலாகிய தாகத்தை); தகை - உலக வழக்குச் சொல். பசந்தவருணு (- பச்சை நிறமுடைய திருமால் போன்றவனே). சலாம் (போடுகிறோம்). வசந்த - மன்மதன் போன்றவனே.

சீமந்த முனக்கெனக்கண் டுவகைமிக எமைமறந்த செயலி ஞலே
நாமந்த முகூர்த்தம்வர விலேயென்ருய் கற்பனேயே ஞாலக் கோட்டம்
போமென்றுய்த் தவனிருப்ப நீயுறின்மீண் டுங்கோடும் புவியென்
றுன்னி
மாமன்று ளாடிதடுத் தமையின்வர வில்லேயிது வாய்மை யாமால். 145

கற்பனேயே — இது (உண்மையன்று) கற்பனேயே. உய்த்தவன்-(சிவனுல் தென்திசைக்கு) அனுப்பப்பட்டவளுகிய அகத்தியமுனி.

பூகம்பம் உண்டானபோது உடுமலேப்பேட்டையிலிருந்து பெருங்குளம், அ. மாதவையருக்கு எழுதியது.

யானே முதுகிருப்பார் யானேமதங் கொண்டுரறி
மேனி குலுக்கவஞ்சி மெய்ந்நடுங்கல் — மானப்பூ
கம்பத்தா லிங்குள்ளார் கம்பித் துறுதுயரங்
கட்பற்கே சொல்லரிது காண். 146

உரறி - வீரிட்டு முழங்கி. மான - போல.

இடரெலாந் திரண்டாலு மொவ்வாத பூகம்பமெய்த லான்மென்
குடரெலாங் குழம்பமனம் பதைக்கவுட னடுங்காக் குழறமாந்தர்
உடரெலா முயிரிலா வெனவுற்று ரவர்நிலேமை யுரைப்பார்க்குச்சொற்
றொடரெலா முதவிடினுஞ் சொல்லொண்ணு தெனில்யானென்
சொல்லுகேனே. 147

குடர், உடர் என்பன குடல், உடல் என்பவற்றின் போலி.

பிரயாண காலத்துப் பிரிவாற்ருமை கருதிக் கவிராச ஈசுரமூர்த்தியா பிள்ளேக் கெழுதியது.

தருத்தீ சுரமூர்த்தி சைப்பொழிசெற் கிகை
வருத்தீ சுரமூர்த்தி வள்ளால் !—அருத்தி
உடைய னினேப்பிரிந்தேன் ஊர்தோறுஞ் சென்று
கடைய னினேப் பிரிந்தேன் காண். 148

தரு(க்கள்) தீ(கின்ற) சுரம் ஊர்த் திசை (-சுரங்களிலும் ஊர்களிலும்); திசை (ஏழன் உருபு). பொழி [-(பகுத்தறிவின்றி மழை) பெய்கின்ற] செல் (-மேகம்) வருத்து ( - வரச்செய்கின்ற - கற்பிக்கின்ற). அருத்தி (-அன்பு) **உடைய நினேப் பிரிந்தேன். கடையன் நினேப்பு இரிந்தேன்.**

அன்பர் சிலரது சேமம் விசாரித்தது.

*கல்லுருகு மின்சொற் கனக சபைவேட்கும்**
*நல்ல நவரதவி நாயகற்கும்† — புல்லியவென்*
*வந்தனமு மன்பும் வழங்குவாய் மாரனைநேர்*
*சந்தவரு ணாசல நீ தா.* 149

S. T. பொன்னம்பலநாத முதலியாருக்கு எழுதியது.

*பிரமாவைச் சேடனை பெட்டிரந்தான் என்றால்*
*ஒருநாவேன் உன்சீர் உரைக்கத் - தரமோசொல்*
*பொன்னம் பலநாதா போற்றுன் புகழ்புகலற்(கு)*
*இன்னம் பலநாதா என்று.* 150

—◇◇—

## *நிருப கவிகள்*

டாக்டர் வே. சாமிநாதையருக்கு எழுதியது.

*தனுசாமி னதயங்கு புருவமிடை யெனும்வள்ளி தலைவா முன்னோற்*
*கனுசாமி னதவர்பல் கோடியரோர் உருவெடுத்த தனையாய் அன்பர்*
*மனுசாமி னதசெயி னும்பொறுப்பா யெனக்குகளை வழுத்து வாய்சீர்*
*துனுசாமி னததண்டம் சமர்ப்பித்தோர் விண்ணப்பம் சொல்லக் கேண்மோ.* 151

*தனுசா புருவம், மி(ன்)ன இடை. முன்னோ(னாகிய விநாயக)ற்கு அனுசா ( - தம்பியே). மின் ஆதவர் ( - சூரியர்) மன் ( - அரசன் ) உசா(வு)ம் ( படியான ) இன்னாத - ( தீமைகள் ). சீர் து ( ன் ) னு.*

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் புரொபெசர்
பண்டிதமணி கதிரேசச் செட்டியாருக்கெழுதியது.

*அரும்பிரசங் கவித்துவச னன்பெனரற் கன்பமுத லயனீ னூற்று*
*வரும்பிரசங் கவித்துவசத் தியின் மோனை முதலவுடன் வாய்பா வல்லாய்*
*கரும்பிரசங் கவித்துவச னச்சோனை மாரிபொழி கார்நே ரான*
*பெரும்பிரசங் கவித்துவச னத்தலைவ கதிரேசப் பெரியோய் கேண்மோ.* 152

* வருணசிந்தாமணி ஆசிரியர்.
† சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித் துறைத் தலைவராயிருந்தவர்.

அரும் பிரசம் ( - தேன் ) கவி ( - குரங்கு)த்துவசன் ( - கொடியை யுடையவன் - அருச்சுனன் ) அன்பு என்(கின்ற). கவித்துவசன் அன்பு அரும்பிரசம் (ஒத்தது) என்(கின்ற) எனக் கூட்டுக. முதல் அயல் நீளுற்று வரும்பிரசம் - முதலெழுத்துக்கு அடுத்த எழுத்து நீண்டுவருகின்ற பிரசம் - பிராசம் ( - எதுகை ). கரும்பு இரசம் (ஆகக்)கவித்து. பிரசங்க வித்துவ சனம். வித்துவ சத்தியினால் பிராசம் மோனை முதல ( - முதலானவை ) உடன் வாய்க்கின்ற பா ( ட்டு ) எனக் கூட்டுக.

## கச்சிக்கலம்பக ஆசிரியர் அரங்கநாத முதலியாருக்கு எழுதியது.

இருவரங்க னுதலுற்றோன் யோகொழிய மலரிணையவ் விறைவன் செய்ய
உருவரங்க னுதநா ணியிற்றொடுத்தோற் றோற்றானுக் குருவ உன்பால்
ஒருவரங்க னுதனிலும் மறவாமே கேட்பதுண்டால்; உது என் னென்னில்
திருவரங்க னுதனின்னன் பினுக்குரியர் தமுளெனையும் சேர்ப்பதாமே. 153

இருவர் ( - உமையும் தானும் சேர்ந்த) அங்கன் ( - சரீரமுடையவன் - சிவன் ). உரு ( - உடலினுள்) அரங்க ( - அழுந்த). இதன் பிறவினையாகிய அரக்குதல் உலக வழக்கில் அழுத்துதற் பொருளில் வருதல் காண்க. ‘வெஞ்சரங்கள் நெஞ் ( சு ) அரங்க வெய்ய காமன் எய்யவே’ கம்பர். நாத (த்தையுடைய வண்டுகளாலாகிய வில்) நாணில்; தொடுத்......உருவ— எய்தவனாகிய மன்மதனைத் தோல்வி அடைந்தவனாகச் செய்த அழகுடைய வனே; தோற்றான் என்பதற்குத் தோன்றாதவன் என்பது தொனி யருத்தம். ஒருவரம் கனுதனிலும் ( - கனவிலும்).

## எட்டையபுரம் இராக்கப்ப பிள்ளைக் கெழுதியது.

மருத்திராக் கப்பலச்சா றுறழ்கவிசொல் வாணர்புகழ் வள்ளால் தோகைக்
குருத்திராக் கப்பணம்பல் குழல்விழிநேர் கோதையர்மால் கொள்ளும் வேளே
உருத்திராக் கப்பணியும் விபூதியும்மெய்க் கணிந்துள்ளத் துமைபா கன்றாள்
இருத்திராக் கப்பமகி பானினது சேமத்தை யெழுது வாயே. 154

மரு ( - மணமுள்ள) திராக்கப்பலச்சாறு (- முந்திரிப்பழத்தின் இரசம்). தோகைக் குருத்து-மயிலிறகின் அடி(போலும்) பல், இரா (த்திரிபோலுங்) குழல், கப்பணம் - கைவாள் ( போலும்) விழி. உருத்திராக்கப்பணி ( - ருத்ராக்ஷ மாலை). தாள் உள்ளத்து இருத்து (கின்ற) இராக்கப்ப.

## மு. ரா. சுப்பிரமணிய கவிராயருக்கு எழுதியது.

*சுப்பிரம ணியவுடுக்கள் புலவர்கள்போன் றிடமதிநேர்ந்*
*து ' தீப பின்சேர்*
*சுப்பிரம ணியவுடுக்க மறவருளச் சிவனைநிதம் தொழுவோய்*
*மெல்நு*
*சுப்பிரம ணியவுடுக்கை யனையமினார் மதன'வெனத் துதிக்கப்*
*பெற்ற*
*சுப்பிரம ணியவுடுக்கை யெனுங்குறட்கு மேற்கோளாத் துலங்கு*
*நேயா.* 155

*சுப்பிரம் ( - வெண்மை) அ(ண்)ணிய உடுக்கள் ( - நட்சத்திரங்கள் ). தீப பின்சேர் சுப்பிர ( - சுப்பிரதீப - கூர்மையான அறிவுடையானே ) ம(ண்)ணிய உள் துக்கம் அற [ - (கல்வியினால்) அலங்கரிக்கப்பெற்ற மனம் (ஞானத்தால்) துக்கம் நீங்கும்படி]. நுசுப்பு ( - இடை) இரமணிய ( - அழகான). உடுக்கை (யிழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவதா (நட்பு) எனும் குறள்.*

## மீனாட்சிசுந்தரக் கவிராயருக்கு எழுதியது.

*நவ்வியரஞ் சிதறுறச்செய் நயனமினார்க் கொருமதனா நாவ லோருள்*
*அவ்வியரஞ் சிதநயப்பா வளவின்றிக் கடிதுரைப்போ யமலை பாகச்*
*செவ்வியரஞ் சிதலையினாற் றேர்கெடாமா லேற்றிலுற்றோர்*
*சேய்க்கன் புள்ளோய்*
*திவ்வியரஞ் சிதவசன மீனாட்சி சுந்தரவென் றிருவன் னோனே.* 156

*நவ்வி ( - மான்) அரம். நாவலோருள்(ளே) அவ்வியர் ( - பொறுமை யுடையவர்கள்) அஞ்சு(ம்படியான) இத நயப்பா ( - இன்பமும் நயமுமான பாட்டுக்கள்). அமலை ( - உமை) பாக(த்திலுள்ள) செவ்வியர் ( - அழகர் - சிவன்). அம் [ - நீர், அழகு (உள்ள)] சிதலை ( - கறையான்). திவ்விய ரஞ்சித.*

## கவிராச நெல்லையப்ப பிள்ளைக்கு எழுதியது.

*கவிராச ருக்கரையா வருந்ததியா வெனுமிதழ்ச்சொற் கற்பார்க்*
*கற்றாங்*
*கவிராச ருக்கரையா வருந்தவுமா காவயலார் கௌவை சொற்றங்*
*கவிராச ருக்கரையா வருந்தலுடைத் துடலெனச்செய் கவின்கொள்*
*காமா*
*கவிராச ருக்கரையா வருந்தமிழ்தேர் நெல்லையப்ப காவ*
*லோனே.* 157

கவிரா (- முருக்கம் பூவா எனும்) இதழ், சருக்கரையா எனும் (இனிய) சொல், அருந்ததியா எனும் கற்பார்க்கு (- கற்பு உடைய பெண்களுக்கு) அல்தூங்க இரா ( - இரவெல்லாம் தூங்கும்படியாக இருக்கமாட்டா ). சரு (-சோற்றைக்) கரையா ( - கரைத்து ) அருந்தவுமாகா. கௌவை ( - பழி ) சொற்று ( - சொல்லி) அங்கு அவிர் ( - விளங்குகின்ற-எல்லாராலும் அறியப் படுகின்ற ) ஆசர் ( - குற்றத்தையுடையரா யிருக்கின்றனர்). உடல் உக்கு ( - உருகு ) அரையா ( - பாதியா ) வருந்தலுடைத்து. கவிராசருக்கு அரையா ( - அரசனே).

## குன்னூர்க் குமாரசுவாமி முதலியாருக்காக வக்கீல் பழனியாண்டி முதலியாருக்கெழுதியது.

தருவித் துவக்குமர சாமி விருப்பைத்
தருவித் துவக்குமர சாமிப் — பெருமைகொள்வாய்
இன்பழனி யாண்டினுநன் கெய்திடமென் றெய்துமொழித்
தென்பழனி யாண்டிவிரைந் தே. 158

தரு (- கற்பகதருப் போன்றவன் ) வித்துவ ( த் தன்மையுடைய ). விருப்பை ( - விரும்பிய காரியத்தை) தருவித்து - வருவித்து ( அவனுக்காகச் செய்து) உவக்கும் அரசு ஆம் [-(அப்படிச் செய்வதுபற்றிக்) களிப்படையும்] அரசன் போலும். இன் பழன்...... - மொழி இனிய பழங்கள் எவ்விடத் தினும் (நாம்) நன்றாக அடைதற்குரிய இடம் ( இதுவே ) என்று அடைந்திருக்கிற (இனிய கனி ) மொழியுடைய. பழன், பழம் என்பதன் போலி.

## குன்னூர்க் குமாரசுவாமி முதலியாருக்கு எழுதிய நிருபங்கள்.

### 1. அவர் குழந்தை இறந்ததைக் குறித்தது.

மிகவிழவார் மங்கலங்கூர் குன்னூர்க்கு மாரசுவா மிக்கோ வேமுன்
புகவிழவாங் கறிந்துந்தி நகர்ந்துதவழ்ந் திருந்துநடப் புந்தெரிந்த
மகவிழவான் மிகவுழவா நின்றனை துன் பெனல்கேட்டோர் வடிகண் கணீர்ம
தகவிழவார் குளப்புனல்போல் பெருகியதென் றுல்பானென் சாற்று மாறே. 159

மிக ( வும் ) விழவு (-திருவிழாக்கள்) ஆர் ( - நிறைந்த ). முன்பு கவிழ ஆங்கு அறிந்து. மகவு இழவால். மதகு அவிழ (- திறக்க) வார் ( - ஒழுகி யோடும்).

## 2

குமாரசுவா மித்திரயத் தெழுமூன் றி ஞென் றும்பொய் கூறுய்
தேன்மொய்க்
குமாரசுவா மித்திரன்முன் புவியுற்ருே னெனநோற்போய்
குதித்து வானெங்
குமாரசுவா மித்திருக் குயிரனையாய் கொழுவளங்கூர்
குன்ஞூர் வாழும்
குமாரசுவா மித்திரவிற் பன்னவொரு விண்ணப்பம் கூறக்
கேண்மோ. 160

கு - பூமி. மார - (பூலோக) மன்மதனே. சுவா - சுபா — சுபம் (- நன்மை; மங்களம்) உடையானே. மி - மி எனும் எழுத்து; திரயம் - மூன்று. மித்திரயம் - மூன்று மி - மும்மி, மும்மியில் எழுமூன்றில் (- இருபத்தொரு பங்கில்) ஒன்று (- ஒரு பங்கு) - இம்மி. 'இம்மி இருபத் தொன்று கொண்டது மும்மி' என்பது கீழ்வாயிலக்க வாய் பாடு. தேன் (- வண்டுகள்) மொய்க்கும் ஆர (ம் உடையவனே.) சுவாமித்திரன் முன்பு வி உற்ருேன் - விசுவாமித்திரன். நோற்போய் (-தவஞ்செய்வோனே). எங்கும் ஆர் அசுவா (- குதிரையுடையானே). திர விற்பன்ன - உறுதி யான விற்பத்தியுடையோனே.

## 3

அவர் மனைவி யிறந்தபோது (15—12—1881-ல்) எழுதியது.

அரியமுள்ள நாளத்த வெனும்புரைதீர்ந் திலங்குகம லான ஞுத
யிரியமுள்ள மிகவுடைய பெருந்தகையோய் பெரியோர்க
ளெவருக் குங்கைங்
கரியமுள்ள மகிழ்வெய்த வநுதினமும் புரிகின்ற கண்ணு வென்றன்
பிரியமுள்ள மைத்துனனே குமாரசுவா மித்திருப்பேர்
பெற்றுள் ளோனே. 161

அரிய (- வண்டுகளையுடையன) முள்ள (- முட்களையுடையன) நாளத்த (- தண்டுகளையுடையன). ஆனனம் - முகம். உள்ள (- மதிக்கும் படி). தயிரியம் மிக உடைய எனக் கூட்டுக. கைங்கரியம் உள்ளம் (- மனம்) மகிழ்வெய்த.

மின்னுடைய வுருவவெழில் விளங்கிமத மிகுவேழ மிதிக்கச் சங்கம்
முன்னுடைய முத்தமும்பின் னுடைவதனு லவைகண்ட
முறுவன் மானுப்
பொன்னுடைய வன்னநடைப் பூவையர்கண் மேவுகுன்றூர்ப்
புரந்த ராவுன்
றன்னுடைய திருபதரி சனத்தால்யா னுனந்தத் தடத்தாழ்ந்
தேனே. 162

மின் ( னல் ) உடைய ( - பின்னிடும்படியாக ). வேழம் - யானை. சங்கம் முன் ( னதாக ) உடைய ( அதனுல், உள்ளிருந்த ) முத்தம் பின் ( னர் ) உடைவதனுல். கண்டம் - கழுத்து. முறுவல் - பல். சங்கு கழுத்து, முத்து பல் மானு (- ஒவ்வாத ). பொன் உடைய - பொற் சரிகைச் சேலைகட்டிய.

வித்தகவித் தைக்கடலா மீனுட்சி சுந்தரவி வேகன் காரை
யொத்தகருங் குழலுலகை நீயிழக்க விதித்தவனை யொறுக்க யானை
மத்தகத்தை யொத்ததனத் தவன்மனைவி மரணமுற வசையி
சைக்கின்
புத்தகச்செங் கையணங்கு தலைக்குவரு மென்றுவசை புகன்றே
னல்லேன். 163

மீனுட்சி சுந்தர ( க் கவிராயர் ). உலகு - உலகம்மை. ஒறுத்தல் - தண்டித்தல். அணங்கு இங்கே சரசுவதி.

என்றனனென் றனைமலரோ னிழைத்தபிழை சிறிதவனை யீன்ற
மாமால்
பொன்றலற உலகினுயிர் தன்னுயிர்போ லினிதளிக்கும் புரவு
பூண்டும்
வன்றனவை தேகியினைப் பிரிந்ததுய ருழந்தும்நீ மயங்கி வாட
வுன்றனது மனைவி உல குயிர்காவாப் பிழைபெரிதே யோருங்
காலே. 164

மலரோன் - பிரமன். மால் - திருமால். பொன்றல் - சாதல். புரவு - காத்தல். வன் ( மையான ) தன ( முடைய ) வைதேகி ( - சீதை ).

உலகாரத் தன்னிடத்தி னுறினுலகின் வளமுமுட னுறுமென்
றேதான்
விலகாத ஆசையுஞ்சேர்ந் தார்ப்பிரித்தல் பாவமெனும் விவேக
முமபற்
பலகாலம் போராட விறுதியிற்பொன் னுடாசைப் பாலாய்த் தன்பால்
இலகாரம் பூண்டவுன தில்லாளை யினிதிருத்த விசைந்த
தேயோ. 165

உலகு ( சிலேடையாய் ) உலகத்தையும் உலகம்மையையும் குறித்தது.

அன்றியந்த வுலகேயிவ் வுலகமர்ந்து பலநலமு மமையச் செய்தேம்
குன்றியலார் சொங்கையிளங் குரும்பையபாம் பையர்போகம்
கூட வேண்டி
நன்றியற்றி யறத்தாற்றி னொழுகுநர்சேர் தின்படையு நாக நாட்டும்
ஒன்றியபன் னலமுமுறப் புரிவமென வுற்றனளோ வுயர்விண்
மீதே. 166

அரும்பெறலுன் றனைக்கணவ னுவடைந்து முலகுனையே
னகன்று ளொன்னில்
விரும்புமுனக் கிணையாகக் கல்வியொடு பேரறிவும் வேண்டுமென்று
வரும்புதிய நினைவுறலு மவைகிடைக்கு மிடந்தேடி வருந்திப்
பெற்றுத்
திரும்பவுநாம் வருவமெனக் கருதியகன் றனளென்று செப்ப
லாமே. 167

4
( 22—10—1882-ல் எழுதியது. )

பெருங்குருகூர் வசிக்கணுமை காதலற்காங் குகற்கன்பா
பிலமண் விண்ணும்
ஒருங்குருகூர் வசியரம்பை மேனகையு மயங்கனங்கா உவணத்
தேறு
வருங்குருகூர் வசியமுகுந் தனையுலக மெங்குமுள வளங்கள் யாவுந்
தருங்குருகூர் வசித்தும் நிகர் குமாரசுவா மீசிலசொற் சாற்றக்
கேண்மோ. 168

கூர் ( மையான ) வசி ( - வாள்போன்ற ) கண் ( களுடைய ) உமை காதலற்குப் பெருங்குரு எனக் கூட்டுக. ஒருங்கு உருகு(ம்). உவணத்து ஏறு ஆ ( க ) வரும் குருகு ( - பறவையை ) ஊர் ( - ஏறி நடத்துகின்ற ). குருகூர் - ஆழ்வார்திருநகரி.

நெல்லையிலே யுனைப்பிரிந்து பிரிவாற்று மைத்துயர நெடிய வேலைக்
கெல்லையிலேன் பரமசிவ முனிவரனை யினிதுவபித் தீசு ரத்தில்
வல்லையிலே சினிலடைந்து கடிதமவ னுனக்கெழுதா வகையென்
னென்றேன்
வில்லையிலேய் கரத்தாயுன் மேல்விலா சந்தெரியா விதமென்
றானல். 169

துயர வேலை (-கடலு) க்கு எல்லையிலேன் (-அளவில்லேன்). வல்லை (-விரைந்து) இலேசினில் (-எளிதில்). வில் அயில் ஏய் - வில்லும் வேலும் பொருந்திய.

அங்கவன்று மதமின்றி யுனக்கெழுத வுன்னுறையு ளறிவித் தேன்றி
யங்கவன்று டகப்பொத்தா ணேடுசில ரூபாயு மிழந்தேன் பின்னே
துங்கவன்று வதுவெனென்று தேறிச்சை தாப்பேட்டை யுற்றேன் முக்கட்
புங்கவன்றாள் போற்றுமெழிற் புரசைவளர் சபாபதிநி புணனைக் கண்டேன். 170

தியங்க அன்று, ஆடகம் (-பொன்னுலாகிய). பின் ஏதும் கவன்று (-வருந்தி) ஆவது என் என்று.

சுகமாக வவனிருக்கின் றான்.அடிவேர் சேடன்முடி தோய்வி ருக்கம்
மிகமாக மளவுஞ்சை தாப்பேட்டை விவசாய வித்யா சாலை
யகமாக மனமொருங்கு பயில்கிருஷி வித்தைபயின் றமரா நின்றேன்
நிகமாக மாதியுணர் நின்சேமம் பொறித்தனுப்போர் நிருபந் தானே. 171

விருக்கம் (-விருக்ஷம்) மிக மாகம் (-ஆகாயத்தை) அளவும். சாலை அகம் - சாலையிடத்தே. ஆகம் [-தேகம் (உழுதல் முதலிய கைத் தொழிற் பயிற்சியும்) மனம் (நூற் பயிற்சியும்)]. நிகமம் (-வேதம்) ஆகமம் ஆதி (யவை).

## 5

இரியமைத்து ணார்புறங்காண் ஏந்தலே! என்றன்
பிரியமைத்து ணுவண்டும் பேடும் — வரியமைத்து
மெய்விளங்கு மாரசுவா மீனவிழி பாகனன்பா
மெய்விளங்கு மாரசுவா மீ. 172

மை (-குற்றமுடைய) து (ன்) ணார் (-பகைவர்) இரிய (-தோற்றோட, அவர்) புறம்காண் (-முதுகைப் பார்க்கின்ற). வரி - இசை. மெய் (-உடலில்) விளங்கும் ஆர (ம் உடையானே) சுவா (-சுபா - நன்மையுடையானே). மெய் (-உண்மையை) விள் (-சொல்லுகின்ற) அம் (-அழகிய).

செவ்வியவி ருத்தமநின் செங்கை யுறநான்கு
செவ்வியவி ருத்தமுய்த்தேன் சேர்ந்திலவோ?—அவ்வியத்தை
முற்றவ வித்தசித்தர் முத்தர்தொழும் அத்தனருள்
உற்றவ வித்தகத்தி ணேய். 173

செவ்வி அவிர் உத்தம. முற்ற - முழுதும். அவித்த - கெடுத்த. உற்றவ(னே).

அப்படியி லையானல் அவ்விருத்த மார்கிருபக்(கு)
இப்படியி லையாநான் என்இன்னம் — செப்புன்
பதிற்கடிதம் பெற்றிலேன் பற்றார் முரண்செவ்
விதிற்கடித டக்கிடுகோ வே. 174

படி - உலகு. பற்றார் - பகைவர். செவ்விதில் - நன்றாக. கடிது - விரைந்து.

இங்கிது னிற்கவியா னேரார் சிதம்பரம்போய்
அங்கிது னிற்கவியா வாச்சியந்தான் — பொங்கி
உருகிவரு மாபோ லுறவினரைக் கண்டேன்
குருகிவரு மானிகருங் கோ. 175

இங்கு இது நிற்க. ஆச்சியம் (- நெய்) அங்கி (- நெருப்பில்) கவியா (- கவிந்து) து(ன்)னில் (- சேர்ந்தால்) குருகு (- பறவையை - கருடனை) இவரும் [- ஏறி (ச் செலுத்தும்)] மால் ( - திருமால்).

என்றாயை யென்பெரிய இன்றாயைக் கண்மதிதீ
என்றாயை யென்பெரிய தேர்கொளும்பூண் — நன்றாய
கைப்படையாக் கொண்டவனைக் கண்டவர்போற் கண்டனன்றீ
கைப்படையாக் கொண்டற் கரா. 176

என் தாயை. கண், மதி தீ என்று (- சூரியன்) ஆய் ( - ஆகப்பெற்று), என்பு பூண் (ஆக) எரியது கைப்படை ஆக. திகைப்பு அடையா (த). கரம் — கை.

என்மனைவி யென்றம்பி யிட்டார்சில ரைக்கண்டேன்
கன்மனைவி யென்றம்பி கைபதத்தைச் — சொன்மனத்தி
னுற்றுதிக் கும்பழனி யப்பன் புரிந்தவறத்
தாற்றுதிக் கும்பழநே யா. 177

கன்ம (த்தை) நைவி (- கெடுப்பாய்) என்று அம்பிகை. மனத்தினல் துதிக்கும். அறத்தாற்று உதிக்கும்.

ஒருவா திரைகடல்சூ ழொண்புவியோ ரெல்லாந்
திருவா திரைகடவுள் சேவை — துருவா
மருவியப்புக் கொண்டலையீ வாற்பணிதல் கண்டு
பெருவியப்புக் கொண்டனன்யான் பின்பு. 178

ஒருவாது (- நீங்காது) இரை (- ஒலிக்கும்). துருவா - தேடி. மருவி அப்புக்கு (- நீருக்கு - கங்கைக்கு). தலையீவான் - சிவன்.

ஒக்கலோ டுங்கா லுறழ்ரயிலுற் றின்வேளூர்ப்
பக்கலோ டுங்காற் பரிதாப — மிக்கப்
பரிசனந்த ணந்து பரமசிவ யோகி
தெரிசனந்த ணன்மெழுகாய்ச் செய்து. 179

ஒக்கலோடு - சுற்றத்தாருடன். கால்உறழ் — சாற்றை ஒத்த (வேக முடைய). அ(ந்த)ப் பரிசனம் ( - சுற்றத்தைத் ) தணந்து ( - நீங்கி). தணலிலிட்ட மெழுகாய். வேளூர் - வைத்தீசுரன் கோயில்.

அங்கவன்ற ணேடுரையான் ஆடினன்அன் ணேஞல்முன்
னங்கவன்ற ணேவங்கு நானிழந்த — துங்கப்
பொருளுள்வெளி தானும் பொருள்வெளியாய்ப் பெற்றேன்*
அருளுள்வெளி தாம்பாலொப் பாய். 180

அங்கு அவன் தன்னோடு. முன்னம் கவன்று அ (ன்) னே ( - ஐயோ!). வெ (ள்) ளிதான் ஆம் பொருள் ( - ஆறுவராகன் ரூபாய்). அருள் (உடைய) உள் ( - மனம் ) வெ (ள்)ளி தாம் ( - வெண்மையான ).

பண்பினடை யாளன்என்அன் பன்முத்து சாமியென்பால்
நண்பினடை யாளமா நன்களித்த — எண்பொருள்கள்
எத்தனையு மொவ்வா எழிற்பொத்தான் மீண்டிலவால்
சித்தனையு மொற்கமுள தே. 181

பண்பின் நடையாளன். நண்பின் அடையாளம். சித்தம் நையும் ஒற்கம் - மனம் வருந்தும் தளர்ச்சி.

அப்பால மாதவனி னன்பின்விடை பெற்றுக்கல்
விப்பால மாதவனி மேலெங்கும் — ஒப்பே
யிலாப்பதியா ரஞ்சிதமா வெய்துசென்னை யுற்றேன்
நிலாப்பதி யாரமன் னே. 182

அப்பால், அ (ந்த). கல்வி (யாகிய) பால மாது. நிலா - ஒளி.

* இராசவல்லிபுரம் முத்துசாமியா பிள்ளை ஆசிரியருக்குச் சிறந்த வேலைப்பாடமைந்த ஆறு தங்கப்பொத்தான்களை அன்புகூர்ந்து வெகுமதியாக அளித்திருந்தனர். அவைகளும் ஆறு வராகன் ரூபாயும் ஆசிரியர் திருநெல்வேலியிலிருந்து சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலைக்குச் செல்லும் வழியில் வைத்தீசுரன் கோவில் மடபதி வித்துவான் சுவாமி பரமசிவத் தம்பிரானைப் பார்க்கத் தங்கியிருந்தபோது களவுபோயின - மற்றொருமுறை தம்பிரானை ஆசிரியர் சந்தித்தபோது களவுபோன பொருள்களில் ரூபாய் மட்டும் மீட்கப்பட்டிருந்தவை ஆசிரியரிடம் கொடுக்கப்பெற்றன. இவ் வரலாறு, முதலில் முத்துசாமியா பிள்ளைக் கெழுதிய செய்யுள் நிருபத்திலும் பின்பு இச் செய்யுள் நிருபத்திலும் இதற்கு முந்திய நிருபத்திலும் கூறப்பெற்றிருக்கின்றது.

சுரும்புரசை யம்பதிகந் தொட்டிடுவே ளேப
கரும்புரசை யம்பதிக ளிக்க — வரும்புரசைத்
தந்தா வளத்தான் சபாபதிசொற் றேன்காதாஞ்
சிந்தா வளத்தாற்றுய்த் தேன். 183

சுரும்பு (- வண்டு) உரசு (- உரிஞ்சுகின்ற) ஐ அம்பு. புரசை - புரசப் பாக்கம். புரசை - புரோசை - யானைக் கழுத்திடு கயிறு. தந்தாவளத் தான் - யானையை உடையவன். காதாம் சிந்தாவ (ள்) ளத்தால்.

இட்டாவ தாநிதிய மெய்திவளர் கின்றவந்த
அட்டாவ தாநிதியங் காதான்றெவ் — கிட்டாமல்
தேசாலி வேலிவருஞ் செங்கையான் சின்னாளில்
மாசாலி வேலிவரு வான். 184

இட்டு ஆவதாம் நிதியம். தெவ் - பகை - பகைவர். தேசு ஆலி வேல் இவரும். மா சாலி வேலி (- நெல்வேலி) வருவான்.

வருவதுசத் தம்பயில்நீர் வார்சடையான் கோவிற்
பருவதுசத் தம்பமங்குப் பங்க — மருவ
லிலதாக வாங்குதற்கா வென்றானாற் றேனுண்
பலதாக வாங்குவிற்பூ பா. 185

வருவது, சத்தம் - (அலை) ஒலி. நீர் - கங்கை. பருவ துசத்தம்பம். உண்(கின்ற) பல (மான) தாக (முடையவனே).

கறுக்குமஞ்சா குந்தலமுண் காயமா லேதோம்
அறுக்குமஞ்சா குந்தலமு மங்கஞ் — சிறுக்குமஞ்சார்
புத்தராரா மச்சவிடைப் பூங்குழற்கட் சீதையைச்சொல்
உத்தராரா மச்சரித மும். 186

தலம் உண் (ட) கறுக்கும் மஞ்சு ஆகும் காய(முடைய)மால். தோம் அறுக்கும் - குற்றம் தீர்க்கும். அங்கம் (- உடம்பு) சிறுக்கும் மஞ்சு (- அழகு) ஆர் (- நிறைந்த) புத்தர [- புது அரா (- அரவு - பாம்பு)] இடை. ரா(த்திரி) குழல். மச்சம் கண்.

உரத்திரத்தி னவலியா லொண்பாச்சொல் வாய்ம
துரத்திரத்தி னவலியும் சோம்பி — யிருத்தல்
ஒருவுனதம் போருகநே ரொண்கையுற வுய்த்தேன்
மருவுனதம் போருளுறு வாய். 187

உரத்திரம் - நெஞ்சுறுதி. நா வலி மதுரத்து இரத்தினவலி (நூல்). ஒருவு (ம்) உனது அம்போருகம் (- தாமரை). மருவு உன்னதம் போருள் உறுவாய்.

சொனுமற் பழகிய சொக்கநா தன்மஞ்
சொனுமற் பழகிய சொக்க — மலிபொற்றோட்
சிங்கமீ னுட்சிசுவாஞ் சிற்பரற்கன் பன்என் அந்த
ரங்கமீ னுட்சிசுந்த ரம். 188

சொல்லும் அற்பு (- அன்புடைய). மஞ்சு (- அழகு) ஒ(ல்)லும் (- பொருந்திய ) மல் (யுத்தம்) பழகிய சொக்கம் மலி (- அழகு மிகுந்த) தோள். மீநாள் - மேனுள் - முன்னுளில். சிசுவாம் சிற்பரன் - திருவிளையாடற் புராண விருத்தகுமாரபாலரான படலம் பார்க்க.

கவிரா சரியெனிதழ்க் கௌரிபதம் போற்று
கவிராச நெல்லையப்ப காளை — தவிராச
ரிந்த கவிராய ஈசுர மூர்த்தியென்நெஞ்
சந்தகவி ராயமுத்து தான். 189

கவிரா - முருக்கம் பூவா. சரி யென் - ஒப்பு எனப்பெற்ற. தவிர் (- தங்கிய ) ஆசு (- குற்றத்தை ) அரிந்த. நெஞ்சம் தக விராய முத்து (சாமியாபிள்ளை) ; தக (- தகுதியாக) விராய (- விரவிய - கலந்த ).

மனசுப் பிரமணம்பா வாணுறச் செய்யென்
றனசுப் பிரமணிய னுவோர் — கனமா
மனதுவந்தங் கெய்துஞ்சே மந்தீட்டி யன்னோர்க்
கெனதுவந்த னஞ்சொ லினிது. 190

மன்சு பிரமணம் (-பிரமிப்பு). என்று (- சூரியன்) அ(ன்)ன சுப்பிரமணியன். - மு. ரா. சுப்பிரமணியக் கவிராயர். (மேலே கண்ட அறுவர்) ஆவோர். மனது உவந்து.

6

தம்பதி யொரீஇப்பஃ றலமுங் காண்பான்
தேசாந் தரிகளாத் திரியுங் காலம்
மகேசுரன் மாதவன் மலரோன் இந்திரன்
குபேரன் முதலாக் கூறுந் தேவர்
எப்பதி யணுகின் இதுதத் தம்பதி
என்ன மருளுவர் அன்ன தாகிய
கொழுவளக் குன்னூ ருழையும்என் உள்ளத்
தலமும்வாழ் குமார சாமீ, தமியேன்

அஞ்சலி அத்தனுய் அறைவது கேண்மதி:
இருதொள் ளாயிரந் தலைப்பெய் தியைந்த
ஒருதொண் ணூற்றைந் தோங்கிய வருடம்
சூலையா மதியிற் றுவன்றிய பத்தெனும்
தேதியிற் சிறியேன் தெரிசனஞ் செய்யக்
குருமுத் துலாம்பகைக் கோற்றொடி மாதர்சூழ்
தருமுத் துலாபுரத் தலத்தில் வருதுமென்
றன்பொடு வரைந்துநீ யனுப்பிய நிருபம்
கண்டனன்; அதுநினைக் கண்டதே யாமெனக்
கொண்டனன். அதுநீ குறிப்பினு ணர்ந்திவண்
வருவது மிகையென வாரா திருந்தனை
என்றியான் இருந்தேன். இருந்த காலை
மாசிலா மதிகா மருமுக மாறன்
தாசிலா மதிகா ரஞ்செய் தயாநிதி
முருகேச னுக வருகேச வன்புகல்
முருகே சமானமா மொழியா லுணர்ந்தனன்
நீவரா மைக்கு நிமித்தம். அஃ தென்னெனில்:
ஏககா லத்திலிஃ தெண்ணிலா ரைக்கொல்பல்
காலராஉற்ற தென்றி யாவருங் கழறலாற்
'காலரா' எனும்பெயர் கழுமிய தொத்துநோய்
இப்பி ராந்தத் திடைநிகழ் கிறதெனும்
வதந்தி உன்றன் வார்செவி யுற்றதே. 191

முழுஅ ராப்பல அணிமுழு முதற்கன்புற் றும்நீ
குழுஅ ராவன்றொ ராவன்று குவ்விற்கா லராவா
மொழிவ துமன்று மற்றதன் பெயரினுல் முழங்கும்
பழிவ தந்தியே தடுக்கவந் திலையிது பண்போ? 192

உணுது றங்கிய வொருத்தனை யெழுப்பிஉண் டிலையே
அணுஅ ருந்துபா லமுதென்று பின்இன்றென் பதுபோன்ம்
எணுதெற் பார்ப்பலென் றெழுதிப்பார்த் திடாமலே இனமை
குணுக ரத்திருக் குமாரசா மிப்பெருங் கோவே. 193

பருவ மாமழை வருகுறி பலபல காட்ட
வருகை நோக்கிஉ கையினூறு மயிற்குழாம் பின்னர்க்
கருமு கிற்கணம் வாராமையா லேங்குவ கடுப்பத்
தரும வென்னுளங் கவற்றினை நினக்கிது தகவோ. 194

## 7

## அவருக்கு அனுப்பிய கடிதத்தில் எழுதிய பாடல்களில் தவறியவை போக எஞ்சியவை

உள்ளப் பி ராணனென விருகண்மணி யென்னவெனக்குவந்தநேயன்
குள்ளப் பி ராமணனு மாவலியை வெல்சீவை குந்த னுன
கள்ளப் பி ரானெனப்பேர் பெற்றவனே டுரையாடிக் களித்தேன் தாய் பால்
கொள்ளப் பி ராசனஞ்செய் விக்கஅரும் பசிதீர்ந்த குழந்தை யேபோல். 195

உள்ள - நினைக்க. குள்ள - குட்டையான.

அகன்றவரை யானகில் மைதிலியை மணம்புணர்வான் அந்நாள் ஐந்து
முகன்றவரை யாண்மையுடன் முறித்தஅரி மருகாவேல் முருகா என்று
புகன்றவரை யாதரிக்கும் குருபரனைத் தொழுதுகல்விப் பொருளை வான் நொந்
துகன்றவரை யாதளித்துத் தன்குலபூ டணமாகத் துலங்கு வானும். 196

ஐந்து முகன் தவர் - சிவ தனுசு. வான் (- மேகம், பொருமையால்) நொந்து கன்ற, வரையாது அளித்து.

துலங்குமா தவன்ககனத் தலையஅகத் தியன்மலையத் துயர மெய்திக்
கலங்குமா தவம்புரியச் சேடனுந்தன் பெயர்விளக்கக் கஞ்சன் நாவில்
இலங்குமா தவயவம்வெ ளிறிமெலிய லாகநா லியற்றிப் பொன்மார்(பு)
அலங்குமா தவனருள்மன் மதனெழில்சேர் தானனலூர் அமரு வானும். 197

ககனத்து - விண்ணில்; காட்டில். மலையத்து உயரம் எய்தி -பொதியை மலையின் உச்சியை அடைந்து ; மலைய ( - மலையும்படி ) துயரம் ( - துன்பம்) எய்தி. சேடன் - ஆதிசேடன்; குறைவுடையவன். தன் பெயர்(ப் பொரு ளாகிய குறைவுடையவன் என்பதை) விளக்க. மெலியல் - மெல்லியல் - பெண் ; மெலிதல். ஆனனஊர் - முகவூர். இக்கவி திரிபுடன் சிலேடை யும் அமைக்கப்பெற்றது.

வாணுட்சி சுரபிதரு மணிகொள்மக வான்பாவம் மாற்றிக் கௌரி
மேனுட்சி சுருடை செய விருத்தனுப் காளையாய் மேலு மந்த
மானுட்சி சுவின்வடிவாய்ப் புரந்தஅரன் பூசைபுரி வானு மான
மீனுட்சி சுந்தரவேள் சேமம்உன்சே மத்தோடறி விக்க மன்னே. 198

மேனுள் சிசுருடைசெய. மானுளைச் சிசுவின்.

இராசவல்லிபுரம் முத்துசாமி பிள்ளை
அவருடைய நண்பர் அழகியசொக்கநாதபிள்ளை
இவர்களுக்கு (1881 அக்டோபரில்) எழுதியது.

பூமகளும் நாமகளும் மாதரெனப் புகல்குறைவு போதலன்றி
மாமிமரு மகளான தாற்பகைகு ரெனும்வசையும் மாற வேண்டித்
தாமுயரா டவராய்நல் நேயராய் யுலகின்முத்து சாமி யென்றும்
தோமிலழ கியசொக்க நாதனென்றும் பெயர்பூண்டு தோன்றி
ஞரால். 199

எனவெவரு மெடுத்துரைப்ப இருஞ்செல்வம் பெருங்கல்வி யினிது
மேவித்
தனையன்றித் தனக்குநிக ரின்றியவாண் மையினுக்குந் தணத்த
லின்றித்
தினநவிலு மனியொனிய நண்பினுக்கும் மேற்கோளாத் திகழ்வோ
ரேயென்
மனவனச மலரினிலும் நிதமகிழ்வொ டினிதுறையும் வள்ளி
யோரே. 200

நவிலல் - பழகுதல். 'அந்நியோந்நியம்' அனியொனிய மெனப் பட்டது. மலரில் உறைதல் என்றதும் வள்ளியோர் (- கொடி போல் வார்) என்றதும் பூமகள் நாமகள் என்றதற்கும் பொருத்தமாயிருத்தல் குறிப்பு.

எளியனும திடத்தினினள் ளிருளில்விடை பெற்றதன்மே
லிணங்கி யென்றுங்
களியுடன்வாழ் கிளையினைநீத் தருங்கடலிற் கூம்பிலுற்ற காகம் போல
வளியனைய வேகமொடு நீராவி யாலியங்கும் வண்டி மேலுற்
றளியினம்பூஞ் சோலையென மாதர்குழ லொடுசென்னை யடைந்தேன்
மன்றோ 201

நள்ளிருள் - நடுயாமம். கிளை - சுற்றம் ( ஆன மற்றைய காகங்கள் ). கூம்பு - பாய்மரம். வளி - காற்று. அளி - வண்டு. குழல் - கூந்தல். பூஞ் சோலை யென்றது, கூந்தல்கள் பூச் சூடியவை யென்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தியது.

சென்னையிலென் னுயிரனைய கள்ளப்பிரானை, யுயர் சிவஞா னப்பேர்
மன்னை*, யென தகமகிழக் கண்டு சின்னா ளவரோடும் வாசஞ் செய்த
பின்னை, விவ சாயவித்தி யாசாலை தனி லெய்தப் பெற்றேன் றந்தை
யன்னையினு மருள்பெருகி யாவரையும் புரந்துவரு மறத்தி
னோரே. 202

புவிராச ரெனினுமன்றிக் கவிராச ரெனினுமெதும் பொருந்தி
யுந்தாங்
கவிராச ரெனல்சிறப்பென் றத்தொடர்தம் பெயர்முனுறக் காட்டி
நற்கட்
செவிராச னிகர்நெல்லை யப்பனீசுரமூர்த்திச் செம்மல் கஞ்ச
வவிராச னனையனைய சீனிவா சக் குரிசி லாதி யோரும் 203

கட்செவிராசன் - ஆதிசேடன். கஞ்சம் (- தாமரையாகிய) அவிர் (- விளங்குகின்ற) ஆசனன் (- ஆசனத்தை யுடையவனாகிய பிரமதேவன்). சீனிவாச ராயர், பிரபல சங்கீத வித்வான்.

நீவிரிரு வருஞ்சேம முடனிருத்த லறிந்திடவோர் நிருப மிக்க
தீவிரமா வரைந்துசென்னைநகரிலர மனைக்காரன் றெருவிற் சேணை
மேவிவிளங் கறுபத்தா றுமனைவாழ் சிவஞான விவேகன் பார்த்து
மாவிரைவி னீக வெனு மேல்விலா சத்தினொடும் வரவுய்ப் பிரே 204

சேண் - ஆகாயம்.

* காலஞ்சென்ற மாசி மந்திரி.

முத்துசாமி பிள்ளை வெகுமதியாக அளித்த தங்கப் போத்தான்களோடு ஆறு வராகன் ரூபாய் களவுபோனதைக் குறித்தெழுதினது.

*தன்மாது லாமுத்துத் தார்புனைந்து நீத்தவரை தனைநேர் மார்பில்*
*பொன்மாது லாமுத்துங் காவறிஞர்க் கனமாடை பொருளீ யுஞ்சற்*
*கன்மாது லாமுத்து களைக்களைந்து நிகர்நீதிக் காவ லாளா*
*என்மாது லாமுத்து சாமீவர் தனஞ்செய்திங் கிசைப்ப கேண்மோ* 205

*தன்ம அதுலா (- ஒப்பிலாத தர்மமுடையவனே) முத்துத்தார் (- மாலை) புனைந்து நீத்தவரை (- அருவிமலை). பொன் மாது (- திருமகள்) உலா (வும் - வாழ்கின்ற) உத்துங்கா (- உயர்ந்தவனே). சற்கன்மா (- சத் கர்மா - நற்செய்கையை உடையவனே) முத்துகளை (ஐயந்திரிபு அறியாமைக் குற்றங்களைக்) களைந்து (- நீக்கி). துலா (- தராசு நாக்கை). மாதுலா - மாமா.*

*உனைக்கவிரா சரின்பேரு மொளிப்புவிரா சரின்சீரு மொருங்குற் றியாரை*
*நினைக்கவிரா சன்மமவ ராநெல்லை வாழ்சுகுண நெல்லை யப்பன்*
*நனைக் கவிரா சரியெனித மூர்மகிழீ சுரமூர்த்தி நாத்தோள் வாணி*
*பினைக்கவிரா சனமெனநல் குங்குமர சாமிப்பேர் பெற்ற செம்மல்* 206

*உ(ன்)னை. ஒளி இங்கே கீர்த்தி. யாரை நினைக்கச் சன்மம்இரா. நனை (- தேன் உடைய) கவிரா (- முருக்கம் பூவா) சரி (- ஒப்பு). நாக்கு வாணி (க்குத்) தோள் பி (ன்) னை ( இலக்குமி )க்கு அவிர் (- விளங்குகின்ற).*

*பண்பகலா வினைய குணம் பல்கருணை சலன்பிரமன் பகர்த லைநாப்*
*பண்பகலா வின்யலுறக் குட்டியசெவ் வேளை நிதம் பதம்ப ணிந்தென்*
*நண்பகலா வினயகுண மீனாட்சி சுந்தரனை நண்பர் தம்மை*
*நண்பகலா வினயராயி லினிற்பிரிந்து* துயர்க்கடலி னடுவ ணாழ்ந்தேன்* 207

*பண்பு அகலா(த) இன்நய (- இனிய நயமான) குணங்கள். நாப்பண் (- நடு - உச்சியில்) பகல் (- பிளத்தல்) ஆ (- உண்டாகும்) இனையல் (- துன்புறல்) உற (- பொருந்த). என் நண்பு அகலா(த) விநய (மான). விநயம் - பணிவு - வணக்கம். நண் பக(லி)ல் (- நடுப் பகலில்) (என்) ஆவி நைய.*

* 1882 அக்டோபர் மாதம் முதல் தேதியன்று திறக்கும் சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலைக்குச் செலலும் ஆசிரியரை இவர்களெல்லாரும் திருநெல் வேலி ரயில் நிலயத்தில் (ஸ்டேஷனில்) வழியனுப்பினமை சுட்டப்பட்டது.

தயித்தியனு தரங்கொண்டு சானகியைப் பிரித்தநாட் டெளர்மால்
போலப்
பயித்தியனு தலையுற்றேன் வழிச் சென்று பரமசிவப்
பாவல் லோனே
வயித்தியனு தனகரிற்கண் டனனங்கு நிகழ்ந்தபுது மையைக்கே
ணெஞ்சம்
லயித்தியனு தமும்பாடுங் கீதமுங்கேட் டுளமகிழுல் லாச மாலே.
208

தயித்தியன் (- அசுரன், இங்கே அரக்கனுன இராவணனைக் குறித்தது). தேவருக்குப் பகைவரென்பது பற்றி அரக்கரையும் அசுரரையும் மயங்கக் கூறல் மரபு. ஆதரம் (- ஆசை). பயித்தியன் ஆ(கு)தலை. வயித்தியனுதனகர் (- வயித்தீசுவரன் கோயில்). நெஞ்சம் லயித்து இயம் (- வாத்திய) நாதமும்.

தானைநா றும்படைகொ ளீசுரமூர்த் திக்கோவத் தலத்தின்
முன்னம்
தானைநா றுரூபாய்தோற் றதுதெரிந்தும் சிலரூபாய் தங்கப்
பொத்தான்
யானைநா றுகளறக்கல் லாவென்மடை யன்கையுய்த்தேன்
இடை குயங்கள்
யானைநா றுமி வேசை யின்புதுன்பென் றறிந்தும்வேட் டிறுவார்
போல. 209

(பகைவர்) தானை (- சேனையை) நூறும் (- அழிக்கும்) படை (- ஆயுதம்). தான் ஐந்நூறு. யான் ஐ (- அழகிய) நூல் துகள் (- குற்றம்). இடை நூல்(தனையும்) குயங்கள் (- தனம்) யானை(களையும்) துமி (- வெட்டுகின்ற. வெல்லுகின்ற என்பது தாற்பரியம்). எதிர் நிரனிறை.

மடையாமற் றையபொருளொ டிவைவையலென் றதுங்கருதா
மற்சப் டம்பர்க்
கடையாமற் றையவைபிற வுடன்வைத்தான் கொணர்கெனவெங்
கணுந்தான் தேடிக்
கிடையாமற் றையலர்போ ணெடுநின் றுனங்தோ. கேடில்
கற்றோர்
தடையாமற் றையலவர்பாற் சாராது சார்வ மென்று சாரு மாலே.
210

மடையா (- சமையல்காரனே) சப்டம்பர் (மாதக்) கடைசியாம் அற்றை (- அன்று). தேடி(யும்) கிடையாமல் தையலர் (-பெண்கள்) போல் நாண் (- வெட்கம்). யாம் தடை அற்று (- இன்றி) அயலவர். பண்பகலா என்ற 207-ம் பாட்டின் அடிக்குறிப்பைப் பார்க்க.

முனவருமை யாகவர தரைநிகரத் துறவடைய முனும்யான் மாமா
வெனவருமை யாகவறல் வேறுபொரு ளொதன்பொருட்டு
மிலேனி லேனீ
கனவருமை யாகவன்பாக் கொடுத்தபொத்தான் களைநினைந்து
கவலா நின்றேன்
மனவருமை யாகவஞ்செய் துயர்வாகை மாலைபுனை மணித்தோள்
வள்ளால். 211

மு(ன்)னவர் உமை(யை) ஆக(த்துடைய) வரதரை (- சிவனை). மு(ன்)னும் - கருதும். மாமா என வரும் ஐயா. (யான்) கவறல் - கவலுதல். கன (- மிகுந்த )அருமையாக. ( தம் சேனையுடன் ) ம(ன்)னவரும் மை ஆகவம் ( - போர் ). மைக்கின்ற - கெடுக்கின்ற.

ஆறுவரா கனுக்கன் றுன ருட்சின்னக் கியானுருக லாரே
னுங்கண்(டு)
ஆறுவரா கனுரையுறும் புனலாக நனியுருகி யமையு மென்னில்
ஆறுவரா கனுவல்வயிற் றதரமினார் கட்குவளை யணிமார் பா செம்(பு)
ஆறுவரா கனுங்காணு வாழமுடைத் தாநெல்லைக் கரசாம் அண்ணல்.
212

உன் அருள் சின்ன(த்து)க்கு (இங்கே பொத்தான்). ஆறு(தலடை) வாரா ?. (இறுகிய) கல்(லுமே). ஆல் (இலை) வயிறு, துவர் ( - பவளம் ) அதரம் ஆக. செம்பாறு ( - தாம்பிரவர்ணி ) வராகனும் ( - திருமாலான பன்றியும் ). யான் உருகுதலைக் கண்ட கல்லுமே நீராக உருகியோடு மென்னில் ஐயுணர்வோடுங்கூடிய யாரேனுங் கண்டக்கால் துன்பம் ஆறுவரா ?

அனகரத்தி னன்றிருந்து மறுநாளில் ரயிலேறி யளிய னெஞ்சம்
பனகரத்தி னங்கெடுத்த பனகமென வுனைநினைந்து பரித பித்துப்
பினகரத்தி னம்விருந்தை யோம்புபவ ரமர்சைதாப்
பேட் டை யுற்றுக்
கனகரத்தி னகரனைநேர் போதகர்பாற் கிருஷிவித்தை
கற்கின் றேனால். 213

அ(ந்த) நகரத்தின் அன்றிருந்து. ப(ன்)னக ( - நாக ) ரத்தினம். நெஞ்சம் பரிதபித்து பின் ( நோக்கி ) நகர. கன ( - மிகுந்த) கர ( - கதிரை யுடைய) தினகரனை ( - சூரியனை ).

நெஞ்சு, பிரிந்த உன்னை நினைந்து நீ யிருக்கும் நெல்லையை நோக்கிச் செல்ல, உடம்பு, சைதாப்பேட்டைக்குச் சென்றதென்பது கருத்து.

இராசவல்லிபுரம், முத்துசாமியா பிள்ளைக்கு எழுதிய நிருபம்.
சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலை (5—12—1882).

1

*காவியந்தா ராய்பலவாங் காவியந்தாழ் வின்றிப்பாங்*
*காவியந்தா ராய்வோயெற் காவியந்த—மாவியன்க*
*ணந்தமுத்து சாமிமுத லாம்பொருளி னந்தமா*
*வந்தமுத்து சாமிமா மா.* 214

*காவி (-குவளையாலாகிய) அம் (-அழகிய) தாராய் (-மாலையை யுடையோனே) பல (வகைய) வாம் காவிய (ங்களைப்) பாங்கா வியந்து ஆராய்வோய். ஆவி (-உயிர்) அந்தம் (-வடிவம்) மா (-மிக) வியன் (-பெரிய) கண் அந்தம். அந்தம், உலகவழக்குச்சொல். சாமி (-பொன்) அந்தமா(க) வந்த.*

*இங்கணனை யாருமின்ப மெய்தியிருக் கின்றேநீ*
*நங்கணனை யாராய நண்பினர்க — ளங்கணே*
*யாவருமின் பாகவுற லெற்கெழுதாய் மும்முலைப்பெ*
*ணாவருமின் பாகனுக்கன் பா.* 215

*நம் கண் அனையார். மும்முலைப்பெண் - தடாதகைப்பிராட்டியார்.*

*இம்மதியிற் றேதி யிருபத் திரண்டின்பின்*
*அம்மதியிற் றேற்கு மவகாசஞ் — செம்மையா*
*நண்ண வருமொழிவு நாள்களறி வாய்புகழை*
*விண்ண வருமொழிகோ வே.* 216

*அம் (-அழகிய) மதியிற்றேற்கும் (-அறிவில்லாதவனாகிய எனக்கும்). ஒழிவு (-விடுமுறை) நாள்கள். விண்ணவரும் (-தேவரும்) மொழி (கின்ற).*

*இன்பதி னைந்துநா ளிவ்விடுதி நாள்பிரிவாந்*
*துன்பதி னைந்துநான் சோராம — லன்ப*
*மனேகருடன் வந்திவரு மான்மதனேர் வாய்கஞ்*
*சினேகருடன் வந்திவணீ சேர்.* 217

*துன்ப(த்)தில் நைந்து. ம(ன்)னே. கருடன் இவரும் (-ஏறும்) மால்; வந்து (-காற்று-தென்றல்) இவரும் மதன் எனக் கூட்டுக.*

2

அரிச்சுவடி களிலரசர் முடியழுந்தப் பெறுமகிபா அனந்த
வாணர்க்(கு)
அரிச்சுவடித் தமைத்தவன மளிப்பவநல் லணங்கினர்வே ளம்பாற்
சந்தய்
அரிச்சுவடி சையுந்தனஞ்சே ரென்னுமுத்து சாமீயென் னன்பார்
மாமா
அரிச்சுவடி யெனினுமுறை யுடனறியாப் பேதமையே னறைவ
கேண்மோ. 218

அரி (-இரேகைகளையுடைய) சு (-நல்ல). அரிச்சு வடித்து அமைத்த அ(ன்)னம் அளிப்பவா. (துன்புற்றுச்) சந்து (-சந்தனம்) அயர் [-(பூசுதல்) மறக்கப்பெற்ற] இ(ந்த)ச் சுவடு இசையும் (-துணை பொருந்திய) தனம் சேர் (வாயாக). உவகை, ஓகையென வழங்கல் போலச், சுவடு, சோடு என வழங்கல் உண்டு.

இங்கணியா வருஞ்சேம மென்பதற்கோர் தடையுளதென்
னென்னில் வாணர்க்
கங்கணியா வருநமழ கியசொக்க நாதனெழுத் ததனில் மிக்க
நங்கணியா வருமுயிர்யா அவையொருவ வெடுத்தனைய நட்பா
ளன்சங்
கங்கணியா வருளாளா வென்னுமுத்து சாமியசு கமுற்று
னென்றுன். 219

இங்கண் (-இவ்விடம்). (பா) வாணர்க்கு அங்கு அணியா (-ஆபரண மாக). எழுத்து - கடிதம். நம் கண் (கள்) யா (வை) அரும் உயிர் (கள்) யா (வை). சங்கம் (-சங்கத்தார்) க(ண்)ணியா.

நின்னருமைத் திருமேனி யிரத்த அதி சாரத்தா னிலைக லங்கி
மன்னருமை யலைச்செய்மதன் றன்னைநிகர்த் திடமுயலல் மானத்
தேய்ந்து
பன்னருமைத் துயருழந்தா யென்பதிடிக் குரல்கேட்கும் பணிபோற்
கேட்டேன்
நன்னருமை யிருபதத்தை யனுதினமுந் தொழுதிடுங்கை நளின
மாலே 220

இரத்தஅதிசாரம் - வயிற்றழற்சி (Dysentery). மன் (-நிலைத்த) அரு (-அருவமுடைய - உரு இல்லாத). பன்னரும் (-சொல்லுதற்கரிய) மை (-குற்றத்தோடு கூடிய). பணி - பாம்பு. நன்னர் உமை. 'உருவல்ல அரு வல்ல ஒன்றிலும் தோய்வதல்ல' என்பதில் அரு அருவமென்ற பொருளில் வருதல் காண்க. நன்னர் - நன்மை (உடைய).

இதுவரையா ரோக்கியநீ யெய்தியிருப் பதும்நெல்லை யிணையில்
சில்லா
வதுவரையா ரோகையுட னமர்நமன்பர் சுகமுமியா னறியத்
தீட்டாய்
பொதுவரையா ரோட்டுகினுங் காப்பமென மலைக்குடைகைப்
பொறுத்து முன்காத்
ததுவரையா ரோமுருகர் தாமோவென் றிடவளரு தாரவேளே. 221

இதுவரை (யிலும்) ஆரோக்கியம். சில்லா (வாம்) அதை : அல்லது அது - பகுதிப்பொருள் விகுதி. வரையார் (- நீங்காதவராகி) ஓகை (- உவகை) யுடன். பொதுவரை (- இடையரை) யார் ஓட்டுகினும். காத்த (ருளிய) துவரையாரோ (- துவாரகாபுரிக் கண்ணனே).

3

பெருந்திக் கடிதத் தைந்திரண்டு பேரி யனங்க னிகரிடையார்
பிறங்கும் கரத்தி லிருந்துபடிப் பிக்கு மவர்வாய் கோவை
யென்று
பொருந்திக் கடிதத் தையேநீ பூங்கற் பகமா மணிசுரபி
பொலிபொன் னாடு மழுக்காறு பூணு நெல்லை மாநகரில்
மருந்திக் கடிதத் தையுறச்செய் மதுர வசன மடமாதர்
மகிழுமரிய திருவுருவ மாரன் முத்து சாமி மன்பாற்
திருந்திக் கடிதத் தைச்செவ்வி தெரிந்தீந் தன்னோன் திருக்கரத்தால்
தீட்டுமரிய திருமுகத்தைச் சிரமேற் கொண்டு திரும்புகவே.
222

பெருந்திக்கு (- எண்பெருந் திசைகளில்) (அலை) அடி (க்கின்ற அலை) தத்து(கின்ற) ஐந்திரண்டு [- ஏழு (கடல்களைப்)] பேரி (கையாக்கொண்ட) அனங்கன் (- மன்மதன்). கடி (க்கிற) தத்தையே (- கிளியே). பொன்னாடு (- தேவருலகு). மருந்து (- அமிர்தத்தையும்) இக்கு (- கரும்பின்) அடி (யையும்) தத்தை (-ஆபத்தை). திருந்து இ(ந்த) க் கடிதத்தை.

4

திருநெல்வேலி வித்துவான்

அழகிய சோக்கநாத பிள்ளை காலஞ்சென்றதைக் குறித்தது.

விந்தமிழை யாதரிக்கும் என்னமுலை பொறுக்குமிடை
மின்னார் வேளே
பந்தமிழை யாதரிபோற் றார்பணிவோய் மதுரரசப்
பாவின் பத்து
வந்தமிழை யாதரிய லருக்குப்பொன் னிலம்வழங்கும்
வள்ளா லென்றுஞ்
செந்தமிழை யாதரிக்குஞ் சந்தமுத்து சாமியென்
சீரார் மாமா. 223

விந்தம் (-மலையை) இழையா ( - நூலா ) தரிக்கும் (-தாங்கும்). பந்தம் இழை (- செய் )யாது அரி ( - திருமால் ). இன்பத்து உவந்து அமிழ் ஐயா. தரியலர் - பகைவர். பொன்நிலம் - வீரசுவர்க்கம். (பொன்னும் நிலமும் தொனிப் பொருள்).

நீரேகப் பால்பருகு மன்னம் போற் கவிரசங்கொள் நெல்லை யப்பன்
ஏரேறு குமாரசுவா மிக்கோவா மிருவர்தமு ளேவ ரேனுங்
காரேநேர் கரத்தாய்நீ யேனுமற்றுன் நண்பர்களுட் கடையே னன்றி
ஆரேனுந் திருநெல்லை யம்பதியி னில்லாத வமையத் தந்தோ ! 224

ஏர் - அழகு. கார் - மேகம்.

வேறு

உருடரத் தினமார்ந் திலகிரு தோண்மே லொளிரிளம் பரிதிநேர் முகனுள்
வருடரத் தினமா னினமெனு நயன மாதரார் மனங்கவர் மாரன்
அருடரத் தினமார் வத்துட னுமையை யரன்றனைப் பணிபவன் வித்வ
புருடரத் தினமா மழகிய சொக்க நாதன்விண் புலத்தினே கினனே. 225

உருள் தரத்தின் ( - மலையின் ) அம் ( - அழகு ) ஆர்ந்து. உள்-(ளத்தை) வருடு ( - தடவும்) அரத்து இனம். அருள்தரத் தின(மு)ம் ஆர்வத்துடன்.

ஆந்திரப் பதம்போற் பதமின்றென் பவர்வா யடைபடச் செந்தமிழ்ப் பதம்போல்
ஆந்திரப் பதமின் றெனப்புரிந் திட்ட வழகிய சொக்கநா தக்கோ
மாந்திர சத்தென் மொழிக்குநே ரின்று வடமொழி யிதுதெரி யாதே
மாந்திர மரர்கா ளெனவுரைத் திடற்கு வானநா டடைந்தனன் கொல்லோ. 226

ஆ(கு)ம் திரப்பதம் (எந்த மொழியிலும்.) இன்று. மாந்து இரசம். ஏமாந்திர் அமரர்காள்.

மண்ணினிற் சிங்கக் குட்டியாஞ்சீநி வாசனு தியவிசை வாணர்
உண்ணிய வாக்கு மமுதெனப் பாட வொப்பில்பல் பதந்தந்தோ மினிமேல்
விண்ணினு ரதன்றும் புருமுத லோர்க்கவ் விதம்பதந் தருதுமென் றேவிண்
நண்ணினன் மிக்க வழகிய சொக்க நாதநா வலரினு யகனே. 227

உண்ணிய - உண்ணும்படி. வாக்கும் - வார்க்கின்ற. சிங்கக் குட்டி, செல்லப் பெயர் (Pet name).

சிலரிசைச் சந்தத் தினிற்சிலர் திரிபிற் சிற்சிலர் சிலேடைகற்
பனையில்
வலரெனப் படுவ ரவ்வண மின்றி வழங்குமெப் பாவினும் வல்ல
புலவனு மொருவன் போதுமென் றெண்ணிப் புலவர்தம்
புலத்துமுத் தமிழும்
நலமுறத் தேர்ந்த வழகிய சொக்க நாதனை யழைத்தனர்
போலும். 228

புலவர் - தேவர். புலம் - இடம் - தேவலோகம்.

மாயிரு ஞாலத் தொளிர்தரு புலமை மருவழ கியசொக்க நாத
ஞாயிறு தோன்றிக் காலையாம் பால நற்பரு வத்திலங் கினது
சேயிள வொளிகான் மாலையாம் விருத்தத் திருப்பரு வமுமிரா
தங்தோ
பாயிரு ளொழிக்கு மதியமாம் எவனப் பருவத்தி லத்தமித்
ததுவே. 229

வேறு

நவவாயி லொருகூட்டி லுற்றவழ கியசொக்க நாதக் கிள்ளை
சிவவாநின் றுளிர்வாயின் மழலைபெற்று வளர்த்தவர்தஞ்
செவிக்கு நல்கிக்
குவவான கொங்கைமினு ரிதழ்க்கோவை யிரதமுண்டு
குகன் சுகம்போல்
தவவானந் தம்பயக்கும் பாடல்பல சொலியுயர்விண் டனிலே
கிற்றே. 230

நவம் - ஒன்பது. கூடு - பறவைக் கூடு; உடம்பு. குகன் (கைச்) சுகம் ( - கிளி - அருண கிரி ).

நின்பாற்செய் வேண்டுகோ ளொன்றுளதஃ தென்னையெனி
னிகழ்த்து கின்றேன்
தென்பாணு டகக்கவிஞர் சிகாமணியா மப்புலவன் சிறியேன்
பால்வை
யன்பான வைப்பதனை யவனோடுங் கொண்டகன்று னதற்கீ டாக
வென்பானீ வைத்திருக்கு மன்புதனைக் கூடுமெனி லிரட்டிப்
பாயே. 231

## திருநெல்வேலிக் கவிராச நெல்லையப்ப பிள்ளை காலஞ்சென்றபோது எழுதிய இரங்கற்பாக்கள்.

*சாகித் தியம்வல்லார் சங்கீதம் வல்லார்கள்*
*மோகித் துணையுற்று மொய்ப்பவர்கள் — சோகித்தே*
*எல்லையற்ற துன்புறஎங் கேய்ந்தாய் கவிராய*
*நெல்லையப்ப நேயா நிகழ்த்து.* 232

*நெல்லையப்ப நீதா நினையன்றிப் பாவாணர்க்*
*கில்லையப்ப னென்னஅவர்க் கெவ்வெவையும் — ஒல்லை*
*இனிதுதவி வந்தாய் இனியவ்வா றீயும்*
*புனிதருளர் கொல்லோ புகல்.* 233

*கவிகளியார் சொல்வார் கவிப்பொருள்ஆர் விள்வார்*
*அவிர்பலநூல் ஏவரா ராய்வார் — எவர் விருந்தை*
*ஆசை யுடன் ஓம்புவார் ஆர்வமிக யாவர்சிவ*
*பூசைபுரி வார்நிதமுன் போல்.* 234

*இதில் யார் என்பதன் பரியாய நாமங்கள் எல்லாம் வரல் காண்க.*

*இளவல் கவிராய ஈசுரமூர்த் திப்பேர்*
*வளவன் குமாரசு வாமி — அளவில்*
*உறவினர்கள் நண்பர் உளர்இவரை யெல்லாம்*
*பிறியமனம் வந்ததெங்ஙன் பேசு.* 235

*பிரிதல், பிறிதலெனவும் வழங்கும்*

*கண்ட உடன்களிகூர் கண்ணும் வருகவென்று*
*விண்டு மலர்வாயும் மெய்யன்பால் — அண்டையில் என்*
*கையைப் பிடித்திருத்துங் கையுமற்றை மெய்யுமினி*
*வையத்துக் காண்குவதெவ் வாறு.* 236

*பன்னூலுன் றோடு பயிலுமின்புற் றேறன்உன்னை*
*என்னூல்கள் கேட்பிக்கும் இன்புற்றேன் — நின்னூல்கள்*
*என்னைக்கேட் பிக்கவுறும் இன்புற்றேன் எற்கினிஇன்*
*புன்னைப்போற் செய்வாருண் டோ.* 237

ஓரரைநா ளுண்டுன் னொடுபழகி யின்புற்றேன்
ஈரரைநா ளுண்டிருப்பா யென்றிருந்தேன் — பாரில் ஒரு
முக்கால்நா ளுண்டும் முடியுமுனம் விண்ணுற்றாய்
எக்கால்யா னின்முகங்காண் பேன். 238

ஆயிரமேய் தொண்ணூற்றொன் றாமாண் டிடபமதி
ஏயிருபா னன்கா யிசைதேதி — சேய்வாரம்
ஓரெழுபா னன்குவய சுற்றநெல்லை யப்பவள்ளல்
சீரிறைதாள் சேர்ந்த தினம். 239

டிப்டி கலெக்டர் கள்ளப்பிரான் பிள்ளைக்கு
அவர் தந்தை வைகுந்நாத கவிராயர் இறந்தபோது எழுதியது.

அவனியிற் கள்ளப் பிரான்றனைப் பெற்றும் அவனையே
மீட்டுமெய் திடுவான்
இவனும்வை குந்த பதியினை நாடிச் சென்றனன் வைகுந்த நாத
கவிஞர்கோன் முன்னா ளிராமனைப் பெற்ற காவல னவனையே
யடையப்
புவிபுகழ் பரம பதமெனு நாட்டிற் புகுந்தது போன்றிட
மாதோ. 240

எட்டயபுரம், காசிவிசுவநாத பிள்ளையின்
முதன் மனைவியும் குழந்தையு மிறந்தபோது எழுதியது.

நீடு புதுவெள்ள நின்றுளதண் ணீரையுங்கொண்
டோடி யொழிந்ததென்ப தொக்குமே — பீடுமிகச்
சார்கா சிவிசுவநா தன்மகவு தாயினொடும்
வார்கா சினியகன்ற மை. 241

பீடு - பெருமை. காசினி - பூமி.

காசிமேசுரம், கிருஷ்ண பிள்ளை காலஞ்சென்றபோது
ஷையார் புதல்வியாருக்கு எழுதியனுப்பிய கவிகள்.

கற்பினா லருந்ததியைக் கலைமகளை யொருசேரக் கடுத்துச் செய்ய
பொற்பினால் மலர்மகளைக் கருணையினா லிமயமெனப் புகலா நின்ற
வெற்பினான் மகளைநிகர் செண்பகமே யித்தினம்யான் விசனங் கூர
அற்பினா னிகரருநின் றந்தைதுஞ்சி யதுகேட்டேன் அந்தோ!
அந்தோ !! 242

கற்பு - (மாதர்) கற்பு; படிப்பு. கடுத்து - ஒத்து.

சின்னாளே யவனுடன்யான் சிநேகஞ்செய் தேனெனினுஞ்
செறிந்த நட்புப்
பன்னாளும் பயின்றாருட் சிறந்தார்போல் என்மனத்தே
பதியப் பெற்றான்
அன்னானின் மலர்முகமுங் கனிமொழியு மளவளவு மளவி லன்பும்
எந்நாளும் யான்மறவேன் மறந்தாலு மறவாதென் னியதந் தானே.
243

---

## சிறப்புப்பாயிரங்கள்

### குமண சரித்திரம் *

வண்மை யாளருட் டலைக்கொடை யாளிமண் ணதனில்
உண்மை யாவிவ னேயெனத் தலையையு முதவும்
ஒண்மை யார்குமணன்சரித் திரத்தினை யுரைத்தான்
தண்மை யார்முக மதிக்கந்த சாமிமா தவனே. 244

தலைக் கொடையாளி - தலையைக் கொடையாகத் தந்தவன் - முதன்மை யான கொடையாளி.

கந்த சாமிமா லாதரங் கனிந்தளித் திட்ட
சந்த மேவிய குமணவான் சரித்திரப் பாவை
உந்து காதலி னொடுதனக் குரிமையாக் கொண்டான்
முந்து றாஉம்புகழ் முறைசையூர் முதல்வன்சண் முகனே. 245

மால் (- திருமால், கந்தசாமிக் கவிராயர்) அளித்த பாவை (யை) (- பெண்ணை, நூலை) உரிமையா (மனைவியாக, உரிமையாக)க் கொண் டான் சண்முகன் (- சுப்பிரமணியக் கடவுள், சண்முகம் செட்டியார்) என்க ஆதரம் - அன்பு. சந்தம் - இசை; அழகு.

* டாக்டர் வே. சாமிநாதையரவர்கள், ராவ் சாஹேப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் இவ்விருவர்களிடமே கந்தசாமிக் கவிராயர் தமது குமண சரித்திரத் துக்குச் சிறப்புப்பாயிரம் பெற்றது கருதத்தகும். இத்துடன் Dr. G. U. போப்பை யர் தமது வாணாள் லக்ஷியமாக் கொண்ட திருவாசக மொழிபெயர்ப்பு முன்னுரை யில் தனித்தமிழ்ப் புலவர்கள் தமிழோடு ஆங்கிலமுந் தேர்ந்த புலவர்கள் ஆகிய பலரை நேரிலே தெரிந்திருந்தும் Prof. சுந்தரம் பிள்ளை, திருவாளர் வெ. ப. சு. இவர்களைப்பற்றி மட்டும் எழுதியிருப்பதும் கருதத் தகும்.

## கச்சிக் கலம்பகம்

*இச்சிக் கலம்பக வன்றா னிணையென் றிருந்தவரும்*
*நச்சிக் கலம்பக முன்னிப் பொழுது நமக்கெனவிஃ*
*துச்சிக் கலம்பகர் நூற்கல வாணிக்கென் றேதஉயர்*
*கச்சிக் கலம்பகம் மால்ரங்க நாதன் கழறினனே.* 246

இச்சிக்கலம் (- விரும்புவேமல்லேம்) பகவன் (- ஈசன்). நச்சி (- விரும்பி) (கச்சிக் கலம்பகத்தைக் கேட்பதற்கு) முன் (எங்கள்) அகம் [- நெஞ்சம் (சிவ நேசத்தாலுருகாமல்)] கல் (லாயிருந்தது); (அதனைக் கேட்ட) இப்பொழுது (சிவபத்தியினுலுருகி) அம்பு (- நீர்போல் நெகிழ்ச்சியுற்றுளது). நூற்கல வாணிக்கு (- நூல்களையே ஆபரணங்களாகவுடைய சரசுவதி தேவிக்கு) இது உச்சிக்கலம் (- சூடாமணி).

## திருநெல்வேலி, அம்பலவாண கவிராயர் இயற்றிய நூல்கள்*

*சந்தனத்தென் காவினறும் பூந்தாதுந் தேன்றுளியுந் ததைந்த தென்றல்*
*விந்தனக வீறடக்குங் குறுமுனியின் றமிழ்கலந்து வீசி மாந்தர்*
*கந்தனது மெய்யெழிலுங் கலையுணர்வு மெய்துவிக்கக் கனகநாடும்*
*வந்தனஞ்செய் திடஅளவில் வளங்கெழுமி விளங்குபுகழ் வழுதி நாட்டில்.* 247

விந்த நகம் (- மலை). குறுமுனி — அகத்தியர். பூந்தாதும் தேன் துளியும் எழிலையும், தமிழ் கலையுணர்வையும் எய்துவிக்க.

*சலதியுடைத் தாரணிமான் றலைதனையை யெனமணிக டகவின் மேவி*
*யிலகுமகழ் மேகலைசூழ்ந் தெழின்மாட வணிமாலை யேந்தித் தன்பால்*
*மலர்வனசத் திருவாணி மாருத தோழியரா மகிழ்வுற் றென்றும்*
*நிலவியமர் தரப்பலவின் னலமுமலிந் திடப்பெறுநன் னெல்லை தன்னில்.* 248

நெல்லைநகர் பூமி தேவியின் முதற் புத்திரியாகவும், அதற்கிசைய அகழ் மேகலையாகவும், மாடத்தின் வரிசை மாலையாகவும், இலக்குமியுஞ் சரசுவதியுந் தோழியராகவும் கூறப்பட்டிருக்கும் பொருத்தம் அறியத் தக்கது.

* ஷெயார் பேர் கவிராச நெல்லையப்ப பிள்ளை அச்சிடுவதைப்பற்றி யெழுதிய சிறப்புப்பாயிரம்.

தென்னாடு புரிதவமோ செந்தமிழ்செய் புண்ணியமோ
சேரார்க் குந்தீங்
குன்னாத வேளாள ருனுற்றியநோன் பின்பயனே வுமைபா கன்றாள்
எந்நாளு மறவாத சைவர்பெரும் பேறேமற் றிவைகள் யாவும்
துன்னாவோ ருருவெடுத்துத் தோன்றினவோ வெனுமாறு
தோன்றி யோனே. 249

துன்னா - துன்னி.

அம்பலவா ணயனமெனுங் கங்கைமுடிப் பவனால்மண்
ணணங்கு பொன்னேய்
அம்பலவா ணவந்தொலையத் தவமுயலு மடியவர்க்கன்
பகலா தோனிய்
அம்பலவா ணற்றுவச முயர்த்தோனைந் திலக்கணமு
மரிதி னாய்ந்த
அம்பலவா ணருக்கரச னம்பலவா ணத்திருப்பே
ரணிந்த மேலோன். 250

நயனம் அம்பு அ(ல்)ல வாள். மண் அணங்கு (-பெண்) பொன் நேயம் (-ஆசையும்) பல (-வலிய) ஆணவ (மலமும்). இயம்பு(கின்ற) அலம் (-கலப்பையாகிய) வாள் (-ஒளியுடைய) நல் துவசம். அம் (-அழகிய) பல வாணர்க்கு (-வித்வான்களுக்கு). மண் அணங்கு பொன்நேயம் - மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்பவை. இவ்வாசைகளை ஈஷணாத்திரயம் என்பர்.

இத்தகைய கவிராச குலதிலகன் றன்பெயரு மின்றே னன்னார்
மத்தகைய கும்பமுலை யின்பமுமொப் பாததமிழ் வலப முமமான்
வைத்தகையர் செம்பதத்து வைத்தசிவ பத்தியுமிவ் வையத்
தென்னை
யொத்தகைய ரும்பிறரு மொருங்குணர்ந்து பேருவகை யுறுவான்
வேண்டி 251

மத்த(த்தையுடைய) கயம் (- யானையின்). மத்தம் - மதம். வ(ல்)லபம். மான்வைத்த கையர் - சிவபெருமான். கையர் - கீழோர்.

அரசவனந் தனிதமுகி னிறவேனந தினந்தேடி யலைந் தலைந்தய்
அரசவனந் தனிகழுஞ்சிற் றெறும்பெனத்தேய்ந் திடச்சடைபாம்
பகற்றித் திவ்விய்
அரசவனந் தனிகரிலாக் கவிசொலிப்போற் றிடுங்கணமா
மன்பர் சூழ
அரசவனந் தனிலமரம் பலவாண குருமணியா மமலன் மீதே. 252

அரச அ(ன்)னம் (வடிவெடுத்த பிரமனும்) தனிதமுகில் (- இடி முழக்க முடைய கார்மேக ) நிற ( த்தையுடை ) ஏனம் ( - பன்றி வடிவெடுத்த திருமாலும் ). அயர் ( - சோர்கின்ற ) அசவல் ( - கொதுகு - கொசுகு ) நந்தல் நிகழும் ( - மெலிவு பொருந்திய ); அன்னம் கொசுவாக ஏனம் ஏறும் பாக என்க. திவ்விய ( மான ) ரச ( மான ) அனந்தம் ( - பல ) நிகரிலா ( - ஒப்பிலாத ). அரசவனம் - திருவாவடுதுறை.

சொல்வளமே பொருள்வளமே யிரட்டைமணி யாயவற்றுற்
றொடுக்கப் பெற்ற
பல்வளமுந் திகழிரட்டை மணிமாலே, நவமணியுட் பதர்நீத்
தெஞ்சும்
வில்வளஞ்சே ரைந்துமணி யெனும்பஞ்ச ரத்தினம்,சீர் விரவிந்
நூல்போ
லெல்வளத்தோ டிசைத்தலரி தென்னுமெழு தரிதல்வண்ணம்
இயம்பி னுனல். 253

வில் - ஒளி. எல் - சூரியன்.

இனையமுத்த மிழினாலு மிணையிலச்சிற் பதிப்பித்தோ
னியாவ னென்னில்
அனையமுக்த மிலங்கார மார்பனிம்முந் நூலிசைத்தோ னுன னத்தில்
நனையமுத்த மிடுமரிய தவப்பேர னுநிறையே நற்பூ னுக
வனையமுத்த மியருமயங் குருவமத னெனவிங்கு வந்து
தித்தோன். 254

இனைய ( - இத்தகைய ). அல் ( - இருள் ) நைய ( - கெடும்படி ) முத்தம் ( - முத்துக்கள் ). ஆனன (- முக )த்தில் நனைய - (குழந்தைப் பருவத்தில் தன் வாய் நீரால்) ஈரமாம்படி. வனை ( - அணிந்த ) அம் உத்தமியர்.

சயமாதைத் தோளிருத்தி வாணியைச்செந் நாவிருத்திச்
சைய மாதை
வயமாக மனத்திருத்திக் கருணையிரு கண்ணிருத்தி வண்மை
கையின்
நயமாக இருத்தியிரு கழலரசர் சிரத்திருத்தி நலத்த கீர்த்தி
பயமாருங் கடற்புவியிற் பாவலர்நா விடையிருத்தும் பண்பு
மிக்கோன். 255

பயம் - நீர்.

துய்யகங்கை குலக்கொழுந்து சைவசிகா மணிநேயர் துணைம
ணிக்கண்
வெய்யதரி யலர்கூற்றுச் சரண்புகுந்தார் சஞ்சீவி விவேக பானு
செய்யபல நூலாழி கடந்திடுநா வாய்புலவர் சிங்க வேறு
மையறவிர்த் தென்மனம்வாழ் கவிராச நெல்லையப்ப
நாவ லோனே. 256

நூல் ஆழிகடந்திடும் நாவாய் - நூல்களாகிய கடல்களைக் கடந்திடும் மரக்கலம் (போன்றவன்); நூற்கடல்களைத் தந்திடும் நா (க்கு) வாய் (ந்த)

## திருக்குறள் திரட்டு

பாலி னுறுமாடை பைந்தேன் தெளிவெனமுப்
பாலி லருங்கவிகள் பார்த்தெடுத்துச் — சால்பிற்
றெளிவுரைசெய் தீந்தான் திருக்குறட்டி ரட்டென்
றளியொடரு ணாசலவேள் ஆல். 257

நூலறிவு உலகறிவு முதலிய பலவகை அறிவுகளை யுட்கொண்டு திருவள்ளுவர் அருளிய திருக்குறள், புல், வைக்கோல் முதலிய பலவகை யுணவுகளை யுண்டு பசு அவற்றின் சாரமாகக் கொடுக்கும் பால் போன்றது; அன்றியும் தேனீயானது பலவகைப் பூக்களினின்றும் எடுத்துச் சேர்க்கப் பட்ட தேனின் தெளிவு போல்வது. இத்தகைய திருக்குறளாம் முப்பாலி னின்றும் திரட்டியெடுக்கப்பட்ட இந்நூலானது பசும் பாலி லமைவுறும் ஆடையையும் தேனிலுள்ள தெளிவையும் போல்வதாம்.

## சுரதரசமஞ்சரி.

(இராசவல்லிபுரம் முத்துசாமியா பிள்ளைமீது திருநெல்வேலி முத்துப் புலவர் பாடியது.)

சுரதரச மஞ்சரிதூர் குகன்வ லாரி குளிருமருள் எழில்விபவம்
கொண்ட பொன்னம்
பரதரச மஞ்சரிதப் பானு மில்லாப் பராக்கிரம ராசவல்லிப்
பதிக்கண் வாழ்மாந்
தரதரச மஞ்சரின்எந் தமைக்கா வென்று தரணிபர்போற்
றிடுமுத்து சாமி மீதே
சுரதரச மஞ்சரிப்பேர்ச் சுவைசால் நூலைத் துகளறுமுத்
துப்புலவன் சொன்னான் மன்னே. 258

கு (- பூமியை) ரதர் [- (திரிபுர சம்மார காலத்தில்) தேராகவுடைய சிவன்] அசம் (- ஆடு) மஞ்சு (- மேகம், முறையே) அரிது ஊர் (கின்ற) குகன் வலாரி (- இந்திரன்). பொன் அம்பரதர (- பீதாம்பரந்தரித்த திருமால் போன்றவனே) சமம் (- ஒப்பு) சரித (த்தின்) பாலும். மாந்தரது (-மக்களது) அரச மஞ்சரின் [- (உன்) மைந்தரைப்போல.]

## வண்டுவிடு தூது.

(மேற்படியார்மீது மீனாட்சிசுந்தரக் கவிராயர் பாடியது.)

சூலமங்கை தவவொளிர வேந்தியவோர் பரமனுதற் சுடர்க்கண்
ணல்மெய்க்
கோலமங்கை தவளவெற்பா மிடைமுலையால் வேதனகங்
கொள்ளை கொண்ட
தாலமங்கை தவறின்றிச் சாற்றரிதாய்ப் புலவரியாந் தாமோ
செப்பற்
பாலமங்கை தவநாட்டின் பெருமையையென் றிடச்சீர்சால்
பாண்டி நாட்டில் 259

சூலம் அம் (- அழகிய) கை (யில்) தவ (- மிகுதியும்). மெய்க்கோலம் (- உடலழகு) மங்கு (- கெட்டுப்போன) ஐ (-மன்மதனைப் போன்ற). இடை, தவள வெற்பு (- வெள்ளிமலை போன்ற) முலை. வேதன் - பிரமன். தால மங்கை (- நாமகள்), செப்பற்பாலம். அம் (-அழகிய) கைதவ (-பாண்டிய) நாட்டின்.

சாலிவா டினகரனேர் கற்புவிழி கல்விகொள்பெண் டாளை
வேள்பாஞ்
சாலிவா டினகரஞ்சி தத்தொடைமீ திருவென்றோன் சவைக்க
ணேநெஞ்
சாலிவா டினகரனந் தனிற்றுயில்வோய் காவெனத்தா சளித்தோ
னேராச்
சாலிவா டினகரத்தி லெழிலொடருள் பொருந்தியுயர்
தலைமை யுற்றோன். 260

சாலி (- அருந்ததிபோலும்) கற்பு. வாள் (போலும்) விழி. தினகரன் (-சூரியன்) நேர் கல்வி. வேள் - மன்மதன். பாஞ்சாலி (- திரௌபதியே) வாடி. நக - (மகிழ) ரஞ்சிதம் (- இன்பம்). நெஞ்சு (- மனம்) ஆலி (- அசைந்து) வாடி நகர் (- ஊர்கின்ற) அனந்தன் - பாம்பு - ஆதிசேடன். சாலிவாடி (- நெல்வேலி). வேள் போல அழகும் மால் போல அருளும்.

இனித்தெருக்கள் பலபுதிய வாகவமைந் திடினுமவை
யிணையி லாச்சீர்
மனித்தெருக்கண் ணுறிற்பழைய தெருவாத றிண்ணமென
மனத்துண் முன்னோர்
உனித்தெருக்க டமுளெதனைப் புதுத்தெருவென் றுரைத்தனரவ்
வுயர்வு சான்ற
தனித்தெருகட் கயிலையெனச் சுதையின்விளங் கொருமாடந்
தன்னில் வாழ்வோன். 261

மன் இத் தெரு - திருநெல்வேலியிலுள்ள புதுத் தெரு.

கற்பகவ னமனைதனக் கொருபாக மளித்தவரன் காமமேமிக்
கற்பகவ னமனையின்பால் வைத்தவற்கு மருள்கூடற் கடவு
ளார்த்தொங்
கற்பகவ னமனையுதைத் தருள்பதத்தை யநுதினமுங் கருதுங்
கன்னன்
கற்பகவ னமனையகைம் மாறுகரு தாதகொடைக் கமலக்
கையான். 262

கற்பை அக (த்திலுடைய) வன (- அழகிய) மனை(வி). காமமே மிக்கு அற்ப கவனம் அ (ன்) னை. (மாபாதகம் தீர்த்த வரலாறு). ஆர் (- ஆத்தி) தொங்கல் [ - (மாலையை) அணிந்த ] பகவன் ( -சிவன் ) நமனை-யமனை. கற்பக வனம் ( - காடு ).

இனித்தமது வொழுக்குமலர் நிகர்த்தெவரு நயக்குமொழி
யிசைக்கும் வாயான்
குனித்தசிலை நுதற்றையல ருரத்திலகு பணைத்தமுலை
குழைத்த மார்பான்
றுனித்தளிமொய் மலர்த்தொடையல் பொறுத்தொளிர்பொ
னகத்தொடமர் தொடுத்த தோளான்
தனித்தரசர் குழுத்தொழலின் முடித்தலைக ளுரைத்தகழ
றரித்த தாளான். 263

குனித்த - வளைத்த. உரம் - மார்பு. பணைத்த - பருத்த. அளி - வண்டு. பொன்நகம் - பொன்மலை.

இக்கவி, தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்த தானு என்ற சந்தம் அமையப் பாடப்பெற்றிருப்பது கவனிக்கத்தகுந்தது.

சகம்வியந்த கவிசொல்கம்ப தமிழ்செய்கும்ப முனிவகந்த
சதுர வென்று
புகழ்மலிந்த கவியனந்த நிதமுவந்து புகலுகின்ற புலவர் நெஞ்சம்
மிகமகிழ்ந்து வகைபொருந்து விதநினைந்து நிகரிகந்த
விழைவு விஞ்ச
அகநெகிழ்ந்து முகமலர்ந்தி னுரைநவின்று கொடைவழங்கி
யருள்செய் துங்கன். 264

கும்ப முனிவன் - அகத்தியன். தனனதந்த தனனதந்த தனனதந்த தனனதந்த தனன தந்த என்ற சந்தத்தி லமைந்தது இந்தக் கவி.

குருமுத்து சாமினிய குறுமுறுவற் கோதையர்கள் கோபா லாவெவ்
வுருமுத்து சாமிகவுன் மையலினு லுயங்கினமன் புடனெம் பக்க
லிருமுத்து சாமிவட மாதியணி திருத்துதியென் றிசைத்தி டுங்கா
மருமுத்து சாமியெனுங் கார்காத்த குலதிலக வள்ளன் மீதே. 265

குரு (- நிறமுடைய) முத்துஉசா(வு)ம் [- விசாரிக்கும் (அழகு வாய்ந்த)]. வெவ் (- கொடிய) உருமு துசா (- இடிக்கொடியை உடைய இந்திரனே). பக்கல் இரு. முத்து. சாமி வடம் (- பொன்மாலை). காமரு (- அழகிய).

எஞ்சலில்பல் சந்தமலி பைந்திரிபு யர்ந்திடுசி லேடை யாதி
விஞ்சிநய மெங்குமுற வொன்பதிர சங்கெழுமி வீழ்பொனுல
மைஞ்சகனி கந்தமுந றுஞ்சுவையு மொன்றினுவ மான மாயோ
துஞ்சொல்வள மம்பொருள்வ ளங்குலவு வண்டுவிடு
தூது நூலே. 266

பொ(ன்)னுல் அமைஞ்ச (- அமைந்த) கனி. ஓதும் (- ஓதப்படும்) சொல்வளம்.

இக்கவி, தந்ததன தந்ததன தந்ததன தந்ததன தான தான என்ற சந்தம் அமைந்தது.

கோகனகத் திருக்குமணி வண்ணன்சத் தியபாமைக் கொடியாங்
கொங்கைப்
போகனகத் திருக்குமணி யெனுமிருவர் கோன்மருகா புகழ் மயூர
வாகனகத் திருக்குமணிச் சதங்கைப்பொற் பாதவென வழுத்தி
யவ்வி
சாகனகத் திருக்குமணி லுரூதருளு மாறுபணி சாந்த சீலன். 267

கோகனகம் (- தாமரை) திருக்கு (- கண்). போக(த்தைத்தரும்) நகத்தி (- குன்று போலும் கொங்கையுடைய சத்தியபாமை) ருக்குமணி. மயூர (- மயில்) வாகன (னே) கத்து (- சப்திக்கின்ற) இருக்கு (என்னும் வேத மாகிய). விசாகன், அகம் (-மனம்) திருக்கு (- கோணல்).

**கனமடுக்க மிக்கசங்கங் கலையுறலாற் பரவையா கமேவ லாற்பா**
**வனமடுக்க முத்தமிழ்தங் குறுதலினல் வான்புலவர் மதித்த லாற்பா**
**லனமடுக்க விருந்திடலான் மீனாட்சி சுந்தரமா வமருஞ் சீரால்**
**இனமடுக்கக் கல்விரவி யென்றுமுற லாற்கடலை யேய்க்குங்**
**கோமான். 268**

**கடலுக்கும் மீனாட்சிசுந்தரக் கவிராயருக்கும் சிலேடை.**

1. கனம் (- மேகம்) மடுக்க (- உண்ண) மிக்க சங்கு அங்கு அலை (தல்) உறலால்; கனம் அடுக்க (- யோக்கியதை - தகுதி பொருந்த) சங்கம் (- வித்வான்கள் கூட்டமும்) கலை (ப்பயிற்சியும்) உறலால்.

2. பரவை (- கடல்) ஆக மேவலால்; பரவு (கின்ற) ஐ (- அழகு) ஆகம் (- சரீரத்தில்) மேவலால்.

3. பாவனம் (- புனிதம்) அடுக்க (- பொருந்த) முத்தும் அமிழ்தும் அங்கு உறுதலினல்; பா வனம் (- பாட்டுக்களின் கூட்டம்) அடுக்க (- பொருந்தும்படி) முத்தமிழ் தங்குறுதலினல்.

4. வான் புலவர் (- தேவர்கள்) மதித்தலால் (- கடைதலால்); உயர்ந்த புலவர்கள் நன்கு மதித்தலால்.

5. பால் (- வெண்மையான) அன்னம் அடுக்க (- பக்கத்திலே) இருந் திடலால்; பாலன்னம் (- பாற்சோற்றை) மடுக்க (- உண்ணும் படி) விருந் திடலால்.

6. மீன் (களது) ஆட்சி சுந்தரமா (- அழகாக) அமரும் சீரால், மீனாட்சிசுந்தரம் (என்ற பெயருடன்) அமரும் சீரால்.

7. இனம் அடுக்க (- கூட்டம் பொருந்த - கூட்டமான) கல் (- இரத்தினக் கற்கள்) விரவி (- கலந்து) என்றும் (- எந்நாளும்); இனம் (- சுற்றத்தார்) அடுக்க (- அடுத்துச்சூழ) கல்வி(யில்) ரவி (- சூரியன்) என்றும் (- என்று சொல்லும் படியும்).

ஏய்த்தல் - ஒத்தல்.

கமுகனக ரமணியசங் கின்த்திணைவெல் களத்தினர்
வேள்கச்ச றுத்து
விமுகனக ரமணியச்செப் பனையமுலை யுமைமகிழ்நன்
விசையிற் பல்லண்
டமுகனக ரமணியற்க யவர்விடுத்த வரவெயும்பாண்
டரங்கற் கன்பன்
சுமுகனக ரமணியமர் மீனாட்சி சுந்தரமால் சொன்னான்
மன்னே. 269

கமுகு அ(ன்)ன, கர (-ஒளியையுடைய) மணிய (-முத்தையுடைய). வி(ம்)மு (கின்ற) கனக (-பொன்னாலாகிய) ரமணிய (-அழகிய) செப்பு. அண்டம் உக (-சிதற) நகர் (கின்ற) அமணியல் கயவர் (-சமணக் கீழோர்). பாண்டரங்கன் - சிவன். சு (-நல்ல) முக நகரம் (-முகவூர்) அ(ண்)ணி (-பொருந்தி).

## சிவகாசித் தலபுராணம்.

ஈண்டியனாட் டியமலியத் தடாதகையை மணந்துகய
லெழுதி வானைத்
தீண்டியனாட்டிய கொடிகொள் செழியர்பிரா னெனத்தேவ
தேவன் காவல்
பூண்டியனாட் டியங்காது வாழ்ந்தபடி மாந்தர்களைப்
போதும் வாழும்
பாண்டியனாட் டியங்குபல வளநகருண் முதன்மருவற்
பால தாகி. 270

ஈண்டு (-நெருங்குகின்ற) இயம் (-வாத்தியம்) நாட்டியம். தீண்டிய (-தீண்டும்படி) நாட்டிய. பூண்டு இயல் (-இயன்ற - நிகழ்ந்த) நாள் (-காலத்தில்) தியங்காது.

நாகமுக வூர்கோள்சூழ் பரிதியென மதிள்சூழ நண்ணிக்
கண்ட
மாகமுக வூர்வசியி னெழில்படைத்த மாதரொடு
மைந்தர் மோக
தாகமுக வூர்திமருத் தாமதன்போர் புரிபொழிலார்
தரப்பெற் றோங்கும்
வாகமுக வூர்வளரி ராமசுவா மிக்கவிஞன் மகிழு
மைந்தன். 271

நாகமுகம் ( - ஆகாயத்தினிடத்தில் ). கண்டம் ( - கழுத்து ஆகிய ) மா(-பெரிய) கமுக ( - கமுகையுடைய ). கமுகுபோன்ற கழுத்துடைய என்றபடி. மோகதாகம் உக ( - ஒழிய ) ஊர்தி (- வாகனம் - தேர் ) மருத்தா ( - காற்றாக - தென்றலாக ). வாக - அழகுடைய.

பெருமாணுக் கருமனைக்கீந் தவன்றொழும்பெம்
மானோர்பாற் பெண்ணு வோர்பா
லருமாணுக் கருணையுருக் கொண்டோன்மெய்த்
துறவுபூண் டடிசார்ந் தோர்க்கு
வருமாணுக் கருவகற்றத் துறைசையுற்றோ னெனுநமசி
வாய நாம
குருமாணுக் கருட்சிறந்தோன் சுத்தசைவ வேளாள
குலசி ரேட்டன். 272

பெருமாள் ( - திருமால் ) நாக்கு அருமனை(வி)க்கு ஈந்தவன் ( - பிரமன்). அரும் ஆணு(க). வரும் மாணு ( - மாட்சிமைப்படாத ) கரு (-பிறவி ). குரு (வின்) மாணுக்கருள்.

அங்கருணு சலதிநிகர் பரமசிவ னடியவருக் கன்பன் வித்வ
சங்கருணு சலயமென்று மணுகாமற் புரந்தருள்வெண்
சலசப் பாவை
தங்கருணு சலனமின்றி யனந்தமா யிரங்கவிசொலத்
றகைமை சான்றோன்
இங்கருணு சலநாமம் புனைந்தோன்றென் வரைமுனிநே
ரிசைபெற் றுள்ளோன் 273

அம் கருணுசலதி ( - அருட்கடல் ). வித்வசங்க (- கூட்டத்தா)ருள் நாச(மும்) லய(மும்). பாவை (-சரசுவதி) தங்கு(கின்ற) அருள் நா(க்கு) சலனம்.

பரவார ணுசிரசில் விசையன்கைச் சிலையினடி
பட்ட வுண்மை
கரவார ணுசிவசி வாவென்னு மவர்க்கருள்செய்
கடவுண் மாநத்
துரவார ணுசிதன மிலகுமையா ளுடன்மகிழ்வுற்
றுறையுஞ் செல்வ
அரவார ணுசிமா தலபுரா ணந்தனைநன் கறைந்தான்
மன்னோ. 274

பரவு ஆரண ( - வேதங்களால் பரவப்படுபவனே ) சிரசில் ( - தலையில் ). உண்மை கரவா(த) ( - ஒளியாத ) ரண [-ரணம்(-புண்)உடையானே]. நத்து (என்ற மூக்கணி, ) உர ( - பலமான ) வார் ( - கச்சு ) அண் ( - பொருந்திய ) நாசி தனம் இல்கு உமையாள். அர ( - சிவ ) வாரணசி ( - காசி ) - சிவகாசி.

## சிவகாசித் தலப்புராண வசனம்.

கற்றுவல்லார் மகிழ்சிவகா சித்தலபு ராணமாங் கனியைக் கல்வி
சற்றுவல்லார் களுநுகர வதனுளுறு சாரத்தைச் சாலு மன்பால்
மற்றெடுத்தீங் கிட்டாற்போ லத்தலமான் மியவசனம்
வழங்கி னுனல்
சொற்றவப்பு ராணமுனஞ் சொன்னவரு ணுசலமெய்த்
தூய்மை யோனே. 275

## சிவகாசி வெண்பா வந்தாதி.

அரவார ணுசிவெண்பா வந்தாதி மாலை
அரவார ணுசிலுரத் தண்ணல் — பரவார்தம்
பந்தமரு ளுசமெய்தப் பண்ணார் பதத்தணிந்தான்
நந்தமரு ணுசலவா ணன். 276

அர ( - சிவ ) வாரணசி ( - காசி ) - சிவகாசி. அரவு ஆர் ( - ஆத்தி ) அண் ( - பொருந்திய ) ஆசு ( - குற்றம் ) இல் ( லாத ) உரத்து ( - மார்பினை யுடைய ). பரவார் [ - வணங்காதவர் ( களுடைய ) ] பந்தம் மருள் ( - மயக்கம் ) நாசம்.

## சிவகாசிக் கலிவிருத்த வந்தாதி.

பொலிவிருத்த மதிமிகர்த்த முகத்தருணு சலநாமப் புலவர்
கோமான்
மெலிவிருத்த ராய்க்கவுரி விருந்துண்டோர் பெருங்கயிலை
வெற்பைப் பேர்த்தோன்
வலிவிருத்த மாகநகத் தழுத்தியருள் சிவகாசி வரதர்மீது
கலிவிருத்த வந்தாதி கனிந்தணிந்தான் கவினுருளங்
களிக்கு மாறே. 277

பொலி (கின்ற) விருத்த ( - வட்டமான ). மெலி (ந்த) விருத்தராய் ( விருத்த குமாரபாலரான திருவிளையாடல் ). வலி (மை) விருத்தமாக ( - வீணாக ).

எட்டையாபுரம், ஆண்டியப்ப பிள்ளை பிள்ளைத்தமிழ் முதலியன.

*அன்னைபோ லருள்கூ ரிளசைவா ழாண்டி யப்பன்மேற்*
*பொருணயத் தொடுசெஞ்*
*சொன்னய மலிபிள் ளைத்தமி ழுதார சோதனை மஞ்சரி நூல்கள்*
*தென்னிய மகமுந் திரிபுங்கற் பனையுஞ் சிலேடையுஞ்*
*செறிதனிக் கவிகள்*
*துன்னுசீர் முகவூர்த் தோன்றன்மீ னாட்சி சுந்தரஞ்*
*சொற்றனன் மன்னே.* 278

*தென் ( - அழகிய ) இயமகம்.*

சிவ தோத்திராந்தாதி.

*இம்மைநல மறுமைநல மிரண்டுமுற விறைவனரு ளெய்த*
*வெங்குஞ்*
*செம்மைதிகழ் சிவதோத்தி ராந்தாதிப் பிரபந்தஞ் சிறப்பச்*
*செய்தான்*
*மம்மாறு வில்லிபுத்தூர்ச் சிதம்பரநா தக்குரிசின் மைந்த னென்றும்*
*பொய்ம்மையொழித் தறநெறியி னொழுகுதிரு மலையப்ப புனிதன்*
*மாதோ.* 279

செந்தமிழ்ச் சிறப்பு.

*தாயைவெறுப் பார்போற் றமிழை வெறுப்பாரும்*
*நேயமுறச் செய்து நிலவுசீர் — ஏயும்*
*தவலின் றியசுந் தரராச மேலோன்*
*நாவல்செந் தமிழ்ச்சிறப்பு நூல்.* 280

*தவல் - குற்றம். நூல் ஏயும் ( - பொருந்தும் ) என இயையும்.*

சேற்றூர்த் தவம்பெற்றநாயகி பிள்ளைத்தமிழ்.

*வானத்தார் புகழ்சேர சோழபாண் டியநாடா மணிக்கோ வைக்குள்*
*தானத்தாற் பெருமையினு னுயர்நடுநா யகமாகத் தயங்கி மேனாள்*
*மானத்தா னயன்முதலோர் மனநடுங்க வாரிநின்று வருமா லால*
*பானத்தா னுமைகுகனு மூவரா சியற்றியசீர்ப் பாண்டி*
*நாட்டில்,* 281

*வானத்தார் - தேவர். மா நத்தான் - பெரிய சங்கு கைக் கொண்ட திருமால். அயன் - பிரமன். வாரி - கடல். ஆலால ( - விஷ ) பானத் ( தைச்செய் ) தான் - விஷத்தையுண்ட சிவன்.*

மைந்தரொடு மாதர்புனை செழுங்களபச் செஞ்சேறும் வனைபூ மாலை
சிந்துமது நீர்குதிரை விலாழிநீர் கரிமதநீர் செல்வர் தம்பால்
வந்தவிர வலர்க்குதவு பொருளொடுவார்த் திடுநீரால் வாய்ந்த
சேறும்
எந்தவயி னுஞ்செறிந்து சேற்றாரென் றிசைக்குமிசை யிசைந்த
தோரூர். 282

விலாழி நீர் - வாய்நுரை (யொடு கூடிய) நீர். இசைக்கும் (- சொல்லப்பெற்ற) இசை (- கீர்த்தி) இசைந்தது (- பொருந்தியது) என்பதனில் உள்ள நயம் நோக்கத்தக்கது. கரி - யானை.

அவ்வூராள் கொற்றவர்கள் பற்பலரு மவ்வூருக் கருகர் மேவி
யெவ்வூரா யினுநிகராப் பெருவனப்பான் முகவூரென் றியைந்த
நாமச்
செவ்வூரா நன்னிலத்தில் வரிசையெரு விட்டுநிதிச் செய்ய தோயங்
குவ்வூராப் பாய்வித்து வளர்த்திடுமோர் பெரியகவி குலதா
ருப்பால். 283

தோயம் (- நீர்) கு (- பூமியிலே) ஊரா (- ஊர்ந்து)
ஊராகும் நிலத்தில் வரிசை எருவிட்டு நிதிநீர் பாய்ச்சி வளர்த்திடும் கவிகுலதாரு.

*கந்தசா மிப்பெயரு மிராமசா மிப்பெயருங் கவினப் பூண்டு
வந்தவிரு பணை; முனதிற் கிளைத்தகிளை, பழனிக்கு மாரசாமி
நந்துமீ னாட்சிசுந்த ரம்.பினதிற் கிளைத்தகிளை, நலங்கள் மிக்க
சந்தவரு ணாசலஞ்சுப் பிரமணிய னொடுகந்த சாமி யாலோ. 284



என்றிசைப்ப வெழுகவிஞ ரொருகுலத்துற்
றதுவிரும்பூ திரும்பூ தீது
நின்றிடுக. வேட்டபே றெய்துவிக்குந் தவந்தானே
நெடுந் தவஞ்செய்
தொன்றியவெவ் வெப்பேறு நிகராப்பே ருத்தன்னை
யுற்ற பான்மை *
நன்றுவிளக் குறுபெயர்கொள் சேற்றார்வாழ் தவம்பெற்ற
நாய கிக்கே. 285

அனையவள்முன் னருளுருக்கொண் டவதரித்துப்
பிள்ளையா வமர்கா லத்து
மணியகாப் பாதியீ ரைம்பருவ வருணனைகள் வழாது நன்கு
புனைபிள்ளைக் கவிமாலை புரிந்தணிந்தான் சிவகாசிப் புராணமாதி
பனுவல்பல வியற்றியோன் முன்சொலரு ணாசலப்பேர்ப்
பாவ லோனே. 286

பருவதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ்.

ஒருவரிரு நீர்முத்தாற் றிடுபொருளா ரூர்க்குளத்தி லூற்ற வாறே
பெருகுகங்கை மூழ்குபலம் பல்லோரு மெத்தலத்தே
பெறுவா ரந்தத்
திருவிரா மேசுரத்தி சருக்குயிரே யாதலன்றித் தேக மும்மா
மருவியொரு பாகமமர் பருவதவர்த் தனியம்மை
மலர்த்தாண் மீதே, 287

ஒருவர் (- சுந்தரமூர்த்திநாயனர்) இரும் நீர் (- பெருத்த நீருடைய) முத்தாறு (- மணிமுத்தா நதி). ஒருமை, இருமை, மும்மை எனத் தொடுத்து (த் தொனியாக) வருதல் காண்க.

செய்யபிள்ளைக் கவிமாலை புனைகெனநாட் டுக்கோட்டைச்
செட்டி மார்கள்
மையறுநற் குலம்விளங்கக் கண்டனூர் துலங்கவரு வள்ள லந்தச்
சைவதலத் தளிக்கீழைக் கோபுரங்கட் டியபரம தருமன் வேதத்
தெய்துமுடி(பு) உணர்முத்து ராமநா மக்குரிசி லிசைத்தா னுக. 288

சேதுபுரா ணக்கருத்துச் செறிதரநற் பத்திரசஞ் சிறப்ப வந்நா
லோதியந்த வம்மையின்சந் நிதியில்விசு வாவசுவென்
றோங்கு மாண்டில்
ஏதமிலா மாசிமதி வருஞ்சிவராத் திரியிலரங் கேற்றி னுல்
தீதறுசேற் றாரருணா சலக்கவிரா யத்திருப்பேர்ச் சீரி யோனே.289

* 'தவஞ்செய்த தவமாந்தையல்' — கம்பர்.

அத்தியின்றே கத்தோல்போர்த் திடுமிரா மேச்சுரரி
னருளா லோங்கு
பத்தியின்றே னொழுகுறச்செய் பருவதவர்த் தனிபிள்ளைப்
பாவைப் பார்த்தோர்
முத்தியின்றே பெற்றேய்யா மதனிலுறு நயமொன்று
முற்றக் கூறச்
சத்தியின்றே யென்னிலத னருமையினைத் தமியேனே
சாற்று கேனே. 290

அத்தி (-யானை) யின் தேகத் தோல். பத்தி (யாகிய) இன்தேன். முத்தி (-வீடு) இன்றே (-இன்றைக்கே). சத்தி இன்றே (-இல்லையே).

## கரையேறவிட்ட புராணம்.

பலநாடா மணிகளமை தமிழ்த்தேய மாலையினுப் பண்ண தாகும்
நலமுறலி னடுநாடாங் காரணப்பேர் பெறுமகத நாடன்; மாந்தர்
மலிபாவக் கல்லழுத்தச் சன்மவா ரியிலமிழா வாறு முத்தி
நிலமாய கரையேற்று மகத்துவந்தன் பால்விளங்கு நீர்மை
தன்னை, 291

பற்பலரு மறிந்துய்யக் கற்றாஞே டியாத்தமணர் பரவை நாப்பண்
வற்பொடுபோ கட்டவப்பர் கரையேற விட்டந்த மான்மியத்தால்
ஒப்பில்கரை யேறவிட்ட வூரெனும்பேர் மருவியடை
யொன்று மின்றிக்
குப்பமெனிற் பற்பலகுப் பத்துளுந்தற் குறித்திடுசீர்க்
குப்ப வாணன். 292

யாத்து - கட்டி. வற்பு - வன்மை.

யாங்கடசா மிறுதியினிற் புகல்குகன்றா ளிணையன்றி
யென்று நெஞ்சைத்
தேங்கடசா மியமுலைக்குஞ் சரிசேரக் குகன்திருத்தாட்
டேத்து வைத்தோன்
நாங்கடசா மிசத்தொரமி சமுமு ணராப் பத்தியொடு
ஞான முள்ளான். 293
வேங்கடசா மிக்குரிசி ருசிலதி காரஞ்செய் விபுதர் கோமான்.

சா(கு)ம் இறுதியினில் குகன் தாள் இணை அன்றிப் புகல் (-தஞ்சம்) யாங்கு அட (-அடா) இருக்கின்றது?. தேம் (-இனிய) கடசாமிய முலைக் குஞ்சரி (-குடமொத்த தனமுடைய தெய்வயானை) தாள்தேத்து (-தாளி னிடத்து). நாங்கள் தசாமிசத்து (-பத்து அமிசங்களுள்) ஒரு அமிசமு முணரா.

தான்பிறந்த தலத்தினுக்கோர் தலபுரா ணந்தனைச் சாற்று கென்னத்
தேன்பிறந்த தமிழினிற்செய் தான்தொண்டை மண்டலத்தார் திலகம் போல்வான்
மீன்பிறந்த கடலுடுத்த புவியிடத்துப் பலகலையும் விளங்கக் கற்றோன்
கான்பிறந்த தார்மார்பிற் சிவசிதம்ப ரத்திருப்பேர்க் கவிஞ ரேறே. 294

மார்பின் - மார்பினையுடைய.

கடையம், கற்பகவிநாயகர் பிள்ளைத்தமிழ்.

துறைசைச்சுப் பிரமணிய குருமூர்த்தி தனதுவழித் தோன்ற லாகப்
பெறலுற்ற பெருந்தவன்குற் றாலதல புராணமுதற் பெரிய நூல்கள்
நறையொத்த சுவைமுற்று நலமுற்ற பலவற்றை நவின்ற கோமான்
மறுவற்ற திரிகூட ராசப்ப கவிராசன் மரபின் மாதோ. 295

துறைசை - திருவாவடுதுறை. நறை - தேன்.

பெண்ணின்வழித் தோன்றலுயர் போலீசு டிப்டிசூப் பிரின்டென் டோங்கு
கண்ணியன்ராவ் சாகிப்பாங் கற்பகவி நாயகமால் கனிந்தன் பாக
அண்ணனென முற்பிறந்தோன் தபாலாபீ சுத்தலைமை யதிகா ரத்தான்
தண்ணளியன் வளைசையெனுங் கடையநகர்ச் சிவன்கோயிற் றரும கர்த்தா. 296

தமிழருமை யறிந்தவயித் தியலிங்க வள்ளலந்தத் தலத்துப் பிள்ளைத்
தமிழுடனந் தாதிதனை யச்சேற்றித் தருகவெனத் தருதல் செய்தான்,
தமிழறிஞ ரெளிதுபடித் தினிதுபொரு ளுணர்ந்துவகை தழைக்க, மூன்று
தமிழ்வளர்நான் காஞ்சங்கப் புலவர்சிகா மணியருணா சலமே லோனே. 297

தருக எனச்செய்தான் தழைக்கச் செய்தானென இயையும்.

## மதுரைத் தமிழ்ச் சங்க மான்மியம்.

*தேமதுரைத் தண்மொழியான் சேதுகுடி அப்துல்கா*
*திறுரா வுத்தன்*
*சேமதுரைத் தனத்தவரால் விசேடநீ திபதியெனச்*
*செய்யப் பெற்றோன்*
*யாமதுரைத் தலுக்காற்ற விலமென்றியா வருமிதுகா*
*றியம்பி டாத*
*மாமதுரைத் தமிழ்ச்சங்க மான்மியஞ்சொற் றனன்கவிஞர்*
*மகிழு மாறே.* 298

*தேம் - தேன். மதுரை - இனிமை. சேம (- காவலாகிய) துரைத் தனத்தவர். யாம் அது (மதுரைத் தமிழ்ச் சங்க மான்மியத்தை) உரைத்த லுக்கு.*

## மதுரைச் சோக்கநாதர் ஒருதுறைக் கோவை.

*பெருகு மொன்பான் சுவைவனமும் பெருங்கற் பனைகள்*
*பலவணிகள்*
*மருவு வனமும் திரிபுவன மகிழுந் திரிபு வனமுமுற*
*அருமை யருமை யெனக்கவிஞ ரதிச யிக்கக் கவிமழைபெய்*
*பருவ முகிலாங் குமரகுரு பரசுவாமி வழித் தோன்றல்;* 299

*திரிபுவனம் - மூவுலகு; திரிபின் அழகு.*

*பேச வினிக்குந் தமிழைமுன்னாட் பெரிதுவளர்த்த மூவேந்தர்*
*ஆசி லொருமெய்த் துறவரச னாகவிந்நா ளதுசெய்தற்*
*கேசில் வடிவு கொண்டுற்றா ரென்ன விளங்கு தவராசன்*
*காசி மடமென் றுலகமெலாங் கழறும் பனசை மடாதிபதி;* 300

*அது செய்தற்கு - தமிழை வளர்த்தற்கு. பனசை - திருப்பனந்தாள்.*

*ஆன்றோர் முறையை யடியொற்றி யருநூற் குரைகள்*
*எழுதுவித்தும்*
*தேன்றா ழினிமை யொடுநவமாஞ் செய்யு ணூல்கள் பாடுவித்தும்*
*தான்றா னுவமை தனக்கான தமிழைத் தாய்போற் றனிவளர்ப்போன்*
*சான்றோர் மதிக்குஞ் சால்புடையான் சாமி நாத*
*முனிவர்பிரான்;* 301

என்று முளதென் றமிழரசிக் கிராச தானி யாகவென்றும்
நன்றெய் தால வாய்ச்சொக்க நாதன் பாட்டுத் தலைவனுத்
துன்று கோவைத் துறையுண்முதற் றுறையாங் காட்சித்
துறையாறு
ரென்று கவிகொ ளொருகோவை யுரையா யென்ன
வுரைத்தனனல்; 302

சிவகா சிப்பு ராணமுதற் சிறந்த பலநூல் சிவபெருமான்
உவவா நிற்க உரைத்தோன்வா னேங்கு பரங்குன் றுறைசேய்க்கு
நவமார் பிரபந் தங்கள்பல நயந்து புனைந்த கவிராசன்
அவனீங் கியமெய் யன்புடையான் அருணு சலநா வலரேறே. 303

## செந்தில் வெண்பா.

வீசலையார் செந்தில்நகர் வெண்பாவை ஓதினுன்
கேர்சலையார் நெஞ்சிற் குடிகொண்டு—நேசம்
தருகுமர தாசரதி தன்னை நனிநேர்
தருகுமர தாச * கவி தான். 304

## குமரேச வெண்பா.

இன்றிருக்கு றட்கும ரேசவெண்பா வும்முரையும்
நன்றுரைத்தொவ் வோர்குறட்கும் நற்கதைநன்—கொன்றப்
பகர்வேள் கவிராச பண்டிதனென் றோதும்
செகவீர பாண்டியவேந் தே. 305

படியாரும் நூல்கள் பலவுள்ள ஒன்றும்
படியாத தின்றென் பதற்கு—முடிவாப்
பகர்சான் றனதுமுப் பாலுரையாம் சீர்சால்
செகவீர பாண்டியவேந் தே. 306

படி - பூமி(யில்)

*குமரதாசன் எனப் பிரபலம் பெற்ற ஆழ்வார்திருநகரிப் பிள்ளையன்.

புரபெஸர் சோமசுந்தர பாரதி மாரிவாயில்

*பாரதி, முன்னாள், காளிதா சப்பேர் படைத்தொரு*
*மேகசந் தேசம் **
*வாரம தாக வழங்கினாள்; இந்நாள், மறுபெயர் மருவுத லின்றிச்*
*சீரிதா இசைத்த திது, பிறர் எவரும் செப்பரி தரிதரி தென்ன*
*மாரி†வா யி‡லென்றோர் மேகசந் தேசம் வழங்கினான்*
*பாரதி மாதோ.* 307

*பாரதி - சரசுவதி; சோமசுந்தர பாரதி.*

---

## *தற்சிறப்புப் பாயிரங்கள்*

---

### 1. சுவர்க்க நீக்கம்
### மொழிபெயர்ப்புப் பாயிரம்

*என்ற ஓரொன்றுக் கிடைநெடுங் காலங்கள் இறந்த*
*மூன்று காலத்துத் தோன்றினர் மூன்றுமா கவிஞர்*
*ஈன்ற வான்கிரீ சித்தலி இங்கிலாந் தென்னும்*
*ஆன்ற தேயங்கட் கணியென விளங்கினர் அனையார்;* 308

*முன்னர் உற்றவன் உயர்அர்த்த கவுரவ முதிர்ச்சி*
*தன்னில் ஒப்புயர் வற்றவன், தகுசெய்யுள் நடையின்*
*உன்ன தத்தினில் அத்தகை யோன்நடு உற்றோன்*
*பின்னு தித்தவன் இரண்டினும் எவரினும் பெரியோன்;* 309

*இயம்பும் முன்னையோர் இருவரைத் தந்திட்ட இயற்கை,*
*தியங்கி அன்னதின் மிக்கது செய்யவல் லாதே,*
*தயங்கும் அம்முனோர் இருவர்கள் தம்மையும் இயைத்து*
*வயங்க லுற்றமூன் றுவனை வகுத்தது மாதோ;* 310

*சிரல்ஓர் பால்அமிழ்ந் தோர்புடைக் கிளம்பலே சிவண*
*ஒருபெ ருங்கவிப் பரிதியே, கிரீசினில் உதித்துத்*
*திருமி இத்தலித் தேயத்துத் திகழ்ந்துபின் செல்வம்*
*மருவும் இங்கிலாந் திடையுற்று வயங்கிற்று மன்னோ;* 311

*சிரல் - மீன் கொத்தி.*

* முகில் (=மேகம்) விடுதூது. † மேகம். ‡ தூது.

அந்த ஆதித்தன் தன்னிலை அகல்வுறு அளவும்
உந்த வாரிதி பெருக்குவற் றொழிமட்டும், உருண்ட
இந்த மாநிலம் எலாம்வல இயக்குதற் கருத்தா
தந்த ஆற்றினே அதிர்வின்றிச் சுழன்றிடு தனையும், 312

ஒக்க ஊக்கமோ டுறுதிநம் உளத்தினுக் குதவி
மிக்க இக்கவி கருத்துறும்; இவன்நிரு மித்த
தக்க இந்தனூ பகப்பெருஞ் சாதனந் தானும்,
தொக்க மாந்தர்க்கு நிலைத்தஅற் புதமெனத் துலங்கும்; 313

எனமு னோர்வியந் தெவனைஎந் நூலைஎத் தினர்கள் ?
அனமி லிட்டன்செய் அத்தகு சுவர்க்கநீக் கத்தை
மணிய தென்றமிழ் விருத்தத்தால் வகுக்கெனப் பெரியோர்
பணிய சொற்றனை கைக்கொண்டு பகர்ந்திடப் புகுந்தேன். 314

காதை நாயகன் கடவுளே; கதைநிகழ் களனோ
மீத லத்தொடு பாதலம் பூதலம்; விடயம்,
பேதம் இன்றிமாந் தருக்கெலாம் உரித்தெனப் பெரிதும்
ஓத நின்றகாப் பியத்திறன் எளியனோ உரைக்கேன். 315

நரியை எய்தகோல் உருவினும் நாண்தரும், கரிகொல்
அரியை எய்தது பிழைப்பினும் இழுக்கன்றென் றுன்றோர்
கரைவ துன்னிஎற் கெளியன கழறுதல் தவிர்த்துப்
பெரிய இன்னகாப் பியமொழி பெயர்த்திடல் பெட்டேன். 316

வழுதி நாட்டிடை வளவநா டுற்றதே மானும்
பழுதில் சோழன்வந் தானெனும் பழம்பதி யோன்;அச்
செழிய நாட்டுறு சேரநா டெனத்திகழ் தென்னம்
பொழில் வளம்பொலி வெள்ளகாற் புதுக்குடி புகுந்தோன். 317

வழுதி - செழியன் - பாண்டியன். வளவன் - சோழன்.

ஏமாது தொண்டைமண் டலகுலத் தினர்இரண் டிராமர்
சமானர், ஆரைமே வழகப்ப தராபதி, தளவாய்
குமார சாமிவேந் திவர்கள்கோக் குடிச்சம்பந் தங்கொள்
பெமான்; மெய்ச் சுப்பிர மணியன்என் பெயரன்என் பெயரன். 318

என் பெயரன் - என்னும் பெயரை யுடையவன்; என்னுடைய பாட்டன்.

சாற்றும் அன்னவன் தனயன், என் தனையன்,எத் தலமும்
போற்று மாப்புகழ்ப் பழநியப் பேந்திர புனிதன்
தேற்றி என்னையுங் கலைபயிற் றியநன்றி சிந்தித்
தேற்ற அர்ப்பணம் அவற்கென இதைச்சமர்ப் பித்தேன். 319

தனயன் - மகன். என் தன் ஐயன் - என் தந்தை.

புதல்வன் தந்தையை உவப்பிக்கும் நிமித்தத்துப் புகன்ற
இதுவெ னும்முண்மை மனக்கொள்வ ரெனின்உயர் புலவர்
குதலை வாய்மகார் ஈன்றவர் மகிழ்வுறக் குளறும்
அதனிற் குற்றம்ஆ யாமைபோல், இதனினும் ஆயார். 320

உரை மிலிட்டஆ தவன்கருத் தாயபே ரொளியுள்
விரவும் ஓர்சிறி தெளியனேன் வெண்மதி மீதே
அரிது வீழ்ந்த(து) அம் மதிநின்று பரவுவ தாகிப்
பெரிய தாயவை யகமுற்ற திம்மொழி பெயர்ப்பே. 321

பெரியதாய வையகம் - பெரியதாகிய வையகம்; பெரியது ஆய். அவை அகம் - உயர்ந்த பொருளை ஆராயும் சபையோரிடம்.

கருத்தெ லாம்ஒரு வான்கவி கருத்துக்கள், கருத்தை
விரித்த சொல்லெலாம் ஒருமுனி வியன்சொற்க ளாக,
உரித்தின் எற்கிதிற் கொளத்தக்க துண்டென்றும் உதனில்
தரித்த கோதுகள் பொறுக்கென்றும் சாற்றல்பே தமையே. 322

பெரியர் கூறிய தென்பரேற் பேதையர் பிதற்றும்
உரையும் கேட்பது கடனெனக் கேட்குவர் உலகோர்:
அரிய ஆங்கில மாகவி அரசறைந் ததாயான்
கரைவ தற்குந்தம் செவிதரல் கலைஞர்க்கு முறையே. 323

அமண் மதத்தசிந் தாமணி ஆதிநூல் வனைச்
சமய வாணரும் பேணுவர், அன்னதே தகையக்
கமைய யேசுவின் அடியவர் கணமன்றி யிதனை
மமர் இ லாப்பிற மதத்தரும் போற்றுதல் வழக்கால். 324

தகைய - போல. கமைய - பொறுமை யுடைய.

## 2. பகவத்கீதைக் கும்மி.

### தெய்வ வணக்கமும் நூற்பெயரும்.

பூவுல குள்ளிட்ட அண்டப் பரப்பெலாம்
பூத்தலும் காத்தலும் போக்கலுமே
ஓவ விலாவிளை யாடல்க ளாவுள
ஓர்பொருள் நீங்கா துளத்துவைத்தே. 325

அப்பொரு ளேமுனாள் கண்ண பிரானாய்
அருச்சுன னுக்குப தேசித்த
மெய்ப்பொரு ளாம்பக வத்கீதை தன்னை
வியன்கும்மி யாக விளம்பிடுவாம். 326

(இ-ள்.) இந்தப் பூமி அடங்கிய அண்டம் உள்பட உள்ள எண்ணிறந்த சகல அண்டங்களையும் ஆக்குதலும் காக்குதலும் போக்குதலுமே நீங்காத திருவிளையாட்டாக உள்ள ஏக பராபரவஸ்துவை எப்பொழுதும் நீங்காமல் மனத்திலே இருத்தி அந்த வஸ்துவே முன் காலத்தில் கண்ணபிரான் வடிவமாகத்தோன்றி அருச்சுனனுக்கு உபதேசித்த உண்மைப் பொருளாகிய பக்வத்கீதையைக் கும்மியாகக் கூறுவோம்.

**குறிப்பு:—** கொம்மை என்ற பதம் மருவிக் கும்மி என்று வழங்குகின்றது. பூத்தல் - உண்டாக்கல்; ஓவல் - நீங்கல்; உளம் - மனம்; வியன் - பெருமை (பொருந்திய).

### நூற் பெருமை

ஈசனே ஆசானாய்ப் பத்தர்க்கு ஞானோப
தேசஞ்செய் உண்மை செகமுணர
ஈசனே கண்ணனாய்ப் பார்த்தனுக் கோதும்
இதன்தரம் யாவர் இயம்பவல்லார். 327

(இ-ள்.) ஈசுரன் தாமே குருவடிவு கொண்டு (பக்குவமடைந்த) பத்தருக்கு ஞானோபதேசம் செய்தருளும் உண்மையை உலகத்தார் அறியும்படி அவர் கண்ணபிரானாகி அருச்சுனனுக்கு உபதேசித்த பகவத் கீதையின் மகத்துவத்தைச் சொல்லவல்லவர்கள் ஒருவருமில்லை.

பரனே அருள்பர மார்த்தம் வியாச
பகவான் பகர்ந்தது பாஷியங்கள்
தருவோர்கள் சங்கரா சாரியர் ராமாநு
சாசா ரியர்மத்வா சாரியரே. 328

(இ-ள்.) தனக்கு மேலான பொருள் இல்லாததென்று பொருள்படும் பரமார்த்தம் என்று பேர்பெற்ற பகவத்கீதையானது, ஈசுவரனுலேயே அருளப்பெற்று வேதவியாச முனீசுவரரால் பாரதத்தில் எடுத்துக் கூறப் பட்டு, சங்கரர், ராமானுசர், மத்துவர் என்ற திரிமதஸ்தாபனுசாரியர்கள் ஆகிய பெரியோர்களால் வியாக்கியானம் எழுதப்பெற்ற பெருஞ் சிறப்புடையது.

**குறிப்பு :—** பகவத்கீதைக்கு மேற்கூறிய பாஷியங்களேயல்லாமல் நீலகண்டபாஷிய முதலிய வேறுபல பாஷியங்களும் இருக்கின்றன.

ஓரிடம் போலெங்கும் உள்ள பரம்பொருள்
ஒப்ப வடமொழி ஒன்றிலன்றிப்
பாரிடை யேபல பாஷையில் உண்டு
பரமார்த்தம் என்ற பரம்பொருளே. 329

(இ-ள்.) ஓர் இடத்திற்போலப் பல இடங்களிலும் நிறைந் திருக்கின்ற பகவானுகிய பரம்பொருள் போலவே, அப்பகவான் அருளிய பகவத்கீதையாகிய பரம்பொருளும் ஸமஸ்கிருத பாஷை ஒன்றில் இருப்பதல்லாமல் பூமியில் வழங்கும் பல பாஷைகளிலும் (மொழி பெயர்க்கப்பட்டு) உள்ளது.

### நூற் பயன்

துக்கத்தை நீக்கும் சுகத்தினை ஆக்கும்
துகளினைப் போக்கும் தொழில்சொல்எண்ணம்
ஒக்கப் புனிதப் படுத்திநல் வாழ்வுய்த்
தொடுக்கத்து முத்தி உதவும்இதே. 330

(இ-ள்.) இந்த நூல் வாசிப்போர்க்குத் துக்கத்தை ஒழித்துச் சுகத்தையுண்டாக்கிக் குற்றத்தைப் போக்கி மனம் வாக்குக் காயம் என்ற மூன்று கரணங்களையும் ஒருசேரப் பரிசுத்தப்படுத்தி முடிவில் முத்தியைக் கொடுக்கும்.

### நூலின் அவிரோத நிலைமை

இந்தநூல் சைவ விரோதம் இலாத
தெனச்சிவ ஞானயோ கீந்திரர்தாம்
முந்த உரைத்ததைச் சிந்தைசெய் தால்இது
எந்த மதத்திற்கும் சொந்தமதே 331

(இ-ள்) இந்த நூல் சைவ சமயத்திற்கு விரோதமானதன்றென்று சிவஞான முனிவர் (சிவஞானபோதச் சிற்றுரையில்) கூறியிருப்பதைக் கவனித்தால், இது எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவானதென்பது விளங்கும்.

## அவையடக்கம்

வாசகம் ஓசை குறைந்த துயர்பா
வருத்தம் அருத்தம் அறிதல்என் றிவ்
வோசைகுன் றாஎளி தாம்கும்மிப் பாவிலிஃ
தோதினன் யாரும் உணர்ந்திடவே 332

(இ-ள்) இந்நூல், வசனத்திலும் உயர்ந்த விருத்தப்பாவிலும் வெண் பாவிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. வசனம் ஓசை குறைந்ததாக (வும் மனப்பாடமாகக் கூடாததாகவும்) இருப்பதாலும் உயர்தரமான விருத்தப்பாவும் வெண்பாவும் அருத்தம் பண்ணுவது கஷ்டமாக இருப்ப தாலும், நான் இந்நூலை ஓசைக் குறைவு இல்லாததும் பொருள் இலகுவாக விளங்குவதுமான கும்மிப் பாட்டிலே கற்றவர்போல மற்றவரும் தெரிந்து கொள்ளும்படி பாடினேன். இக்கும்மிப் பாட்டுக்கள் இலகுவானவை களானாலும் கூறும் விஷயம் தத்துவ ஞானமானதால் உரையெழுதுவ தவசியமாயிற்று.

பூசிக்க ஈசனைப் போலொரு விக்ரகம்
பொற்பப் புரிகுதல் போலெவரும்
வாசிக்கக் கீதையை யான்கும்மிப் பாவில்
வகுத்தனன் வண்டமிழ் வாணர்களே. 333

(இ-ள்) தமிழ் வல்லோரே, நினைத்தற்கரிய ஈசுவரனை எளிதாகப் பூசித்து வணங்கும்படியாக, அவரது பாவனா ரூபத்தை விக்கிரகமாக அமைத்தல்போலப், பொருள் தேர்தற்கரிய வடமொழிக் கீதையை யாவ ரும் வாசித்துப் பொருளறிந்துகொள்ளும்படி தமிழிலே கும்மிப் பாட்டாகச் செய்தேன்.

கண்ணாலே காணொணன் யாரும் எளிதாகக்
கண்ணுறக் கண்ணனும் வண்ணம்உண
ரொண்ணாத கீதையும் யாரும் எளிதா
உணர்ந்திடக் கும்மியா உற்றதுவே. 334

(இ-ள்) கண்ணாலே காணக்கூடாத அரூபியாகிய பகவான் எல்லா ரும் எளிதாகக் கண்டு தெரிசிக்கும்படி கண்ணபிரானாக உருக்கொண்டது போல, அறிதற்கருமையான பகவத்கீதையும், எல்லாரும் இலகுவாக அறியும்படி கும்மிப் பாட்டுக்களாக அமைந்தது.

அண்டகோ டிக்குள் அடங்காப் பொருள்என்
அகத்துள் அடங்கும் அதிசயம்போல்
அண்டர்கோன் சொன்னகீ தைப்பொருள் தானும்
அளியனேன் சொற்குள் அமைந்ததுவே. 335

(இ-ள்) பலகோடி அண்டங்களுக்குள்ளும் அடங்காது விரிந்த பரம்பொருளாகிய ஈசுவரன், என்னுடைய நெஞ்சாகிய சிறு வீட்டில் வீற்றிருக்க அமைந்த ஆச்சரியம் போல அப்பகவான் அருளிய கீதை யாகிய பரம்பொருளும் எனது கும்மியாகிய சிறு பாட்டில் அமைந்தது.

தக்கவர் யாரினும் தக்கோன்சொல் கீதையைச்
சற்றும் தகாதேனோ சாற்றவல்லேன்
மிக்க அரியதை மிக்க எளிதால்
விளைத்தல் அவன்றன் விளையாட்டே. 336

(இ-ள்) எல்லாரினும் மிக்கோனாகிய கண்ணபிரான் அருளிய தத்துவஞான சாரமாகிய பரமார்த்தத்தை, அதனைக் கூறுவதற்குச் சிறிதும் தகுதியில்லாத நானோ சொல்லமாட்டுவேன். நான் சொல்லியது அவன் அருளாலன்றி வேறன்று. அரிய காரியங்கள் யாவற்றினும் அரிய காரியத்தை எளிய கருவிகள் எல்லாவற்றினும் எளிய கருவியால் முடித்தல் அவன் திருவிளையாட்டு.

துரும்பிற் சுரேசர் வலிகெட்ட தோஇளஞ்
சொற்பிள்ளைக் குப்பொன்னன் தோற்றதுவோ
பெரும்பித்த னேன்பர மார்த்தம் புகன்றிட்ட
பெற்றியோ அற்புதம் கற்றவரே. 337

(இ-ள்) ஒரு சிறு துரும்பினால் தேவர் தலைவர்கள் பலந்தொலைந்தது ஆச்சரியமோ? மழலைச்சொல் மாறாத பிரகலாத னென்ற சிறு பிள்ளைக்கு இரணியன் தோற்றது ஆச்சரியமோ? பேதைமையுள்ள யான் பரமார்த்தமாகிய பகவத்கீதையைக் கும்மியாகக் கூறியது ஆச்சரியமோ? எது ஆச்சரியமென்று கற்றோரே சொல்லுங்கள். தேவர் தலைவர்கள் துரும்பால் வலியிழந்தது காஞ்சிப்புராணம் அமரீசப் படலத்திற் கூறியிருக் கிறது.

இஞ்ஞால அல்போக்கும் தன்னொளி இல்விளக்(கு)
இன்தீபம் சேர்தலால் யாரகத்தும்
அஞ்ஞான அல்போக்கும் தன்ஞானம் இல்லா
அளியன்பாக் கீதை ஒளியுறலால். 338

(இ-ள்) சுயமான பிரகாசம் இல்லாத விளக்கு இனிய தீபச்சுடர் ஏற்றப்பெறுதலினால் எல்லாருடைய வீட்டிலும் இந்தப் பூமியில் உள்ளதாகிய சாதாரண இருளை நீக்கும். (அதுபோல) சுவஞானம் இல்லாத எளியேனுடைய பாட்டும் பகவத்கீதையின் ஞானப்பிரகாசம் உறுவதனால் எல்லாருடைய நெஞ்சிலும் அஞ்ஞான இருளை நீக்கும். யார் அகத்தும் என்பதை உவமானத்தோடும் உவமேயத்தோடும் பொருத்திக்கொள்க.

அகத்தும் என்பது உவமானத்தில் வீட்டிலும் என்றும் உவமேயத்தில் நெஞ்சிலும் என்றும் பொருள்படுகிறது.



# அனுபந்தம்

---

## திருவள்ளுவர் திருநாமங்கள்.

தேவர், திரு வள்ளுவர் தெய்வப் புலவர், பெரு
நாவலர், நாதனார், நாயனார்,—மேவுமுதற்
பாவலர், மாதானு பங்கி,செந் நாப்போதார்
ஆவர்குறட் காசிரிய ரால். 339

## சமசைகள்.

தாயை மகளைமணந் தானுண்டோ வென்றாய் நூல்
ஆயு மருணாச லாகேட்பாய்—தூயமணிப்
பூவைப்பூ மேனிப் புனிதன் மணம்புணர்ந்தான்
பூவைப்பூ வின்மகளைப் போந்து. 340

மணி ( நீலரத்தினம்போலும்) பூவை (-காயாம் பூவை). பூவை - பூமி தேவியை. பூவின் மகளை - பூமிதேவியின் மகளை ( - யாகத்துக்காக உழுத பூமியில் தோன்றிய பூதேவி மகளான சீதா தேவியை. )

நத்துகவி வல்லஅரு ணாசலகேள் கும்பமுனி
சித்தசனை வென்றோன் சிவன்திருத்தாட்—பத்தித்
தடமமிழ்தந் தாவளமுன் தான்தந் திரா
விடமமிழ்தந் தானென்று விள். 341

அமிழ்(கின்ற) தந்தாவளம் ( - யானை - கும்பமுனி ). தந்த திராவிடம் அமிழ்தம்.

## தாய்மொழி வாழ்த்து

(மிலிட்டனிலிருந்து மொழிபெயர்த்தது.)

வாழிதாய் மொழியே! வருக! வருக!
குழற முயன்றஎன் குழவி நாக்கை
இதமா அசைத்து முதல்முதற் பேசுவித்
திளமகார்க் கியல்பாம் இடறுத லுடனே
நிரப்பா மொழிகளை நிறையா உச்சரிப்
போடும்என் இளஞ்சிற் றுதடுக ளூடு
நழுவி வெளிப்பட நன்கு மிழற்றுவித்
தோரிரு வருடமுன் புரையிலா ஊமையா
வைகிய மௌனம்அவ் வழியோட் டினையே. 342

## எருதின் இலக்கணம்.

ஏர்கொண்ட மாட்டுக் கிலக்கணமி யாதென்னில்
எழில்பெறும் உடம்புத்தலை
இனியதாய்க் கறுத்துத் திரண்டொளிரு கின்றகண்
இணைத்துச் சிறுத்தகற்கொம்
பிசைபெறும் முயற்செவி இரட்டைக் கழுத்ததில்
இசைந்தொட்டி யுள்ளதாடி
இலகிரட் டைச்சிமிழொ டுட்கூன லுற்றுயர்
இரட்டைமுது கிருபுறத்தும்
வார்கொண்ட மைந்துறும் பருமென்பு தங்கிய
வனப்பொடு புடைத்திடும்விலா
மன்னும் உள் ளங்கையின் அடங்கத் தகுந்தகடை
வயிறுபின் ஏறுசட்டம்
மருவாணை வால்போற் சிறுத்தபோ ழகேறு
வால்கரும் பாம்புதன்னை
மானும் கருந்தாரை ஒட்டுகோ சம்பெரிய
வகிருறும் இரட்டைநாடி
கூர்கொண்ட கடைதலுற் றிடுதம்ப மொத்துக்
குலாவும் குறும்பருங்கால்
குவவுக் கருங்கலொத்திணையுறுங் குத்துக்
குளம்பு முத லாம்அவயவம்
கொண்டுடலம் நீண்டு குறு ரோமம்செ றிந்ததோல்
கூறுமத் திமதிண்ணமாய்க்
குலமயிலை கரியமால் வெள்ளைகரு வெள்ளைமெய்
குளிர்சந்த னப்புல்லையாஞ்
சீர்கொண்ட நிறமெதேன் கொண்டுகொள் ளிக்கொம்பு
செங்கோல்வெட் டுக்குளம்பு
தேய்கின்ற அரைகுளம் பிணையடிகள் சாத்துகால்
திரியுமங் திக்கால்முதல்
தீங்கெலாம் நீங்கிமுன் காற்சுவட் டுக்குமுன்
செய்யபின் காற்சுவடுறத்
திடநடைகொள் வேகமுறும் இடபம்இட பங்களுட்
செப்பும்அர செனலாமே. 343

---

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[ எண் — பக்கவெண் ]

# பெயரட்டவணை.

[எண் — பாட்டெண்]

ராவ் சாஹிப்

# வெ. ப. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C.

## இயற்றிய நூல்கள்

1. சுவர்க்க நீக்கம் முதற் காண்டம் ... 0 12 0
   (‘பாரடைஸ் லாஸ்ட்’ என்னும் ஆங்கில நூலிலிருந்து விருத்தப்பாவில் மொழிபெயர்த்தது.)
   ஷை காலிகோ கட்டடம் ... 1 4 0
2. கோம்பி விருத்தம் (2-ம் பதிப்பு) ... 0 8 0
   (சென்னைச் சர்வகலாசாலை 1934-ம் வருஷத்து இண்டர்மீடியேற்றுப் பாடப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது.)
3. நெல்லைச் சிலேடை வெண்பா (2-ம் பதிப்பு) ... 0 6 0
   (இதிற் சில வெண்பாக்கள் சென்னைச் சர்வகலாசாலை 1936-ம் வருஷத்து B. A. பாடப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)
4. இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம் ... 2 0 0
   (ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தது.)
5. இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிற அதிக பிராணாபாயமான வியாதிகளைப்பற்றிய புஸ்தகம்
   (ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தது; கவர்ண்மென்றால் பிரசுரிக்கப்பட்டது. சென்னைக் கவர்ண்மென்று அச்சுக்கூடம் சூப்பரிண்டண்டுக்கு எழுதிப் பெறலாம்.)
6. இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய ஜாதி வரலாறும் (2-ம் பதிப்பு) ... 0 6 0
7. கல்வி விளக்கம் முதற்பாகம் ... 1 0 0
   (‘ஸ்பென்ஸர்ஸ் எஜுகேஷன்’ என்ற ஆங்கில நூலிலிருந்து ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஸ்ரீ S. V. கள்ளபிரான் பிள்ளை, B. A., ஸ்ரீ அப்பாவு பிள்ளை, L. M. & S. ஆகிய மூவரும் மொழிபெயர்த்தது.)
8. ஜான் மில்டனுர் சரித்திரம் ... 0 4 0
   (மேற்குறித்த சுவர்க்க நீக்கம் முதற் காண்டத்தின் ஒரு பகுதி 1911-ம் வருஷத்து இண்டர்மீடியேற்றுப் பாடப் புத்தகம்.)
9. கால்நடைகளுக்கு வியாதி வராமல் அம்மை குத்தலும் அதன் உபயோகங்களும் ... 0 1 0

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | சருவ சன சேபம் | ... 0 | 1 | 0 |
| | (சென்னைச் சர்வகலாசாலை 1937—1938-ம் வருஷங்களின் எஸ். எஸ். எல். ஸி., இண்டர் மீடியேற்றுப் பாடப்புத்தகங்களிற் சேர்ந்தது.) | | | |
| | ஷை அடக்க விலைப் பதிப்பு. | | | |
| | 'அன்பின் ஆற்றல்' என்ற கட்டுரையுடன் | ... 0 | 0 | 3 |
| 11. | கம்பராமாயண சாரம் : பாலகாண்டம் (ராப்பர்) | ... 1 | 10 | 0 |
| | (காலிகோ) | ... 2 | 0 | 0 |
| 12. | ,, அயோத்தியா காண்டம் | | | |
| | (ராப்பர்) | ... 1 | 6 | 0 |
| | (காலிகோ) | ... 1 | 12 | 0 |
| 13. | ,, ஆரணிய காண்டம் | | | |
| | (ராப்பர்) | ... 1 | 6 | 0 |
| | (காலிகோ) | ... 1 | 12 | 0 |
| 14. | ,, கிட்கிந்தா காண்டம் | | | |
| | (ராப்பர்) | ... 1 | 6 | 0 |
| | (காலிகோ) | ... 1 | 12 | 0 |
| 15. | ,, சுந்தர காண்டம் | | | |
| | (ராப்பர்) | ... 1 | 10 | 0 |
| | (காலிகோ) | ... 2 | 0 | 0 |
| 16. | அகலிகை வெண்பா (மூன்றும் பதிப்பு) | | | |
| | (வசனம், குறிப்புரையுடன்) (ராப்பர்) | ... 0 | 10 | 0 |
| | (காலிகோ) | ... 1 | 0 | 0 |
| 17. | திருவாவடுதுறை அம்பலவாணதேசிகமாலை | ... 0 | 0 | 9 |
| 18. | தனிக்கவித் திரட்டு (குறிப்புரையுடன்) (ராப்பர்) | ... 0 | 12 | 0 |
| | (காலிகோ) | ... 1 | 0 | 0 |

---

4, 5 இலக்கப் புத்தகங்கள் கையிருப்பில்லை.

*மற்றப் புத்தகங்கள் கிடைக்குமிடம் :-*

**தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் Ltd.**

திருநெல்வேலி & சென்னை.

*ஹிலால் பிரஸ், திருநெல்வேலி—10-'39.*

